# சுதேசமித்திரன்

27-6-43
Vol XIV No 21

வாரப்பதிப்பு

PRICE 3 ANNAS



THE SWADESAMITRAN ILLUSTRATED WEEKLY

# சுதேசமித்திரன்

## வாரப்பதிப்பு

சுபானு௵ ஆனிமீ 13உ (27 - 6 - '43)


# புதிய வைஸ்ராய்

இந்தியாவுக்குப் புதிய வைஸ்ராய் யார்? இன்று ஒருவரது பெயர்; நாளை மற்றொருவரின் பெயர். இப்படியே தினசரி வெவ்வேறு நபர்களின் நாமதேயங்கள் வெளியாகி வந்தன. "வருகிறது, வருகிறது, எதிர்பாருங்கள்" என்ற விளம்பர முறையை ஒத்திருந்தது இந்த ஹேஷ்ய விழா. 6 மாத காலத்துக்குப் பிறகு ஒருவாறு இந்த ஹேஷ்யப்படலம் சமாப்தியாகி விட்டது. இந்தியாவில் சேனாதிபதியாகவிருந்த பீல்டு மார்ஷல் வேவலே வைஸ்ராயாக வந்து விட்டார். அவர் வகித்தஸ்தானத்தில் ஜெனரல் ஆச்சின்லெக் நியமனமாகி விட்டார். அடாடா! இதென்ன ஆச்சர்யம்! இந்தியாவில் இன்றுள்ள நிலைமை பரம கேவலமாக இருக்கிறதே! இந்த சந்தர்ப்பத்திலா ஒரு ஸோல்ஜரை இந்த ஸ்தானத்துக்கு நியமிப்பது? சிடுக்கவிழ்க்கவேண்டிய சமயத்தில் மேலும் அதில் ஒரு மணி முடிச்சைப் போடுவது மாதிரியாகவல்லவோ இருக்கிறது! என்று இந்தியர்கள் நினைக்க இடமுண்டு.

ஜெனரல் வேவலைப்பற்றிய வீர பராக்கிரமங்கள்தான் வெளிக்கு வந்திருக்கிறதேயன்றி அவரது அரசியல், ராஜ தந்திர ஞானம் எத்தகையதாயிருக்கும் என்பது பற்றித் திட்டமாகத் தெரியாது. ஆகவே ஜெனரல் வேவல் வைஸ்ராயாக வருகிறார் என்றதும் பலவாறான கருத்துக்கள் வெளி வந்தன. அது இயற்கையே. இந்தியா சம்பந்தப்பட்டவரையில் இன்று மக்களின் மனத்தை அலைத்துவரும் விஷயங்கள் இரண்டுதான். அரசியல் நெருக்கடி ஒன்று; தலைவர்களைக் கால வரையின்றி எத்தனை காலம் அடைத்து வைக்கப் போகிறார்கள்? என்பது மற்றொன்று. தாம் வகிக்கப் போகும் பதவியிலிருக்கும்லின்லித்கோபிரபு செய்து வைத்திருக்கும் திருப்பணியையே மேலும் ஜெனரல் வேவலும் தொடர்ந்து செய்யப் போகிறாரா? என்று சந்தேகம் தட்டுவதும் சகஜம். ஆனால் அவர் சமீபத்தில் இந்தியாவில் செய்யப் போகும் வேலை குறித்து சில பிரிட்டிஷ்காரர்கள், சாம்ராஜ்ய நாடுகளின் நிருபர்கள் ஆகியோரடங்கிய கூட்டத்தில் பேசினார். இந்தியாவைப் பற்றி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஆனந்த முண்டாக்கும் வகையில் பேசி வந்திருக்கும் மிஸ்டர் அமெரி துரையும் அக் கூட்டத்தில் பேசினார். ஜெனரல் வேவலின் குணாதிசயங்களைப்பற்றியும், அவரது சாமர்த்தியம், ஞானம் முதலியவற்றைக் குறித்தும் அவர் பாராட்டினார்.

ராணுவ உடையிலிருந்து விடு பட்டு ராஜீயத்துறையில் பரிபாலனம் செய்ய வந்தவர் என்ற முறையில் உடுப் பணிந்து வேவல் பேசினாராம் என்ன பேசினார்? புதிய வைஸ்ராய்களாக வந்தவர்கள் என்ன பேசுவது வழக்கமோ அப்படித்தான். இந்தியாவில் பிறந்தேன்; இந்தியப் பிரச்னைகளை உணர்ந்தேன்; என்றெல்லாம் இந்தியா மந்திரி அமெரியே பேசினார். அவர் ஆட்சியிலே கண்ட பலன் கண் கூடு.

'நான் இந்தியாவின் உற்ற தோழன்; அந்நாட்டுக்குச் சேவை செய்வதன் மூலம் என் கடமையைப் பூர்த்தி செய்வேன்" என்று கூறினார் வேவல். இந்தியாவின் பரிபூர்ண லட்சியம் கைகூட வேண்டினால் ஜப்பானியப் பேராபத்தை நீக்க வேண்டும். என்கிறார். 'நாங்களா வேண்டாமென்கிறோம்? உங்கள் நோக்கம் ஈடேறத்தான் வழி சொல்கிறோம், கேளுங்கள், கேட்டால் உங்கள் லட்சியமும் கைகூடும்" என்றனர் தலைவர்கள். ஆனால் அதிகாரிகள் உதறித் தள்ளி விட்டனர் யோசனையை. இந்தியாவில் ராணுவ ஆட்சி இராதென்றும், கொடுத்த உறுதிகளை வாபஸ் பெறவோ மறந்து போகும்படியோ விடப் போவதில்லையென்றும் ஜெனரல் வேவல் உறுதி தருகிறார். இந்தியாவில் செய்த வேலையின் அளவு, இனிச் செய்ய வேண்டிய வேலை இவை பற்றியும் அவர் பிரஸ்தாபித்தார். இது முக்கியமாக இந்தியர் வேலை என்றும் கூறுகிறார். இந்தப் பாடம் இந்தியருக்குப் புதி

—அடுத்த பக்கம்

# சென்ற வார நிகழ்ச்சிகள்

## மத்திய சட்ட சபையில் அவசரப் பிரேரணை

ராஜப்பிரதிநிதி வீசிவரும் அவசரச் சட்டங்களைக் கண்டித்து மத்திய சட்ட சபையின் அடுத்த கூட்டத்தில் ஸ்ரீ ஏ. என். சடோபாத்யாயா ஒரு அவசரத் தீர்மானம் கொண்டு வருவார். ராஜப்பிரதிநிதி தமது நிர்வாக சபையையோ மத்திய சட்ட சபையையோ கலக்காமல் தம் சொந்தப் பொறுப்பிலேயே அவசரச் சட்டங்களை வெளியிட்டு வருவதைக் கண்டிக்க நிர்வாக சபை தவறிவிட்டதைப்பற்றி விவாதிப்பதே மேற்படி தீர்மானத்தின் நோக்கம். மேற்படி இரு சபைகளுடனும் கலந்து யோசிக்காமல் அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்படுவது இரு சபைகளுக்கும் கண்ணியக் குறைவாகுமென்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

* * * *

## ஜனநாயக மோசடி பற்றி ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி

ஐக்கிய மாகாணத்தில் மந்திரி சபையை அமைக்க நடந்து வரும் முயற்சிகளைப்பற்றி ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிதரின் அபிப்பிராயத்தை அறிய சிலர் முயன்றதாக நம்பிக்கையான முறையில் செய்தி கிடைத்திருக்கிறது. மாஜி பிரதம மந்திரி மாஜி மந்திரிகள், சபைத் தலைவர் எம். எல். ஏக்கள் முதலிய பலர் சிறையிலிருக்கும் பொழுது மந்திரி சபை ஒன்றை அமைக்க முயற்சி நடப்பது கண்டு ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி ஆச்சரியம் தெரிவித்ததாகவும், அங்ஙனம் செய்வது ஜனநாயக மோசடி என்றும், வாக்காளருக்கு இழைக்கும் நம்பிக்கைத் துரோகமென்றும் அவர் குறிப்பிட்டதாகவும் தெரிகிறது.

* * * *

## காரே கூட்டும் மகாநாடு

சமீபத்தில் தென்னாப்பிரிக்கப் பார்லிமெண்டில் நிறைவேற்றப்பட்ட தென்னாப்பிரிக்க இந்தியர் தடை மசோதாவினால் ஏற்பட்டுள்ள நிலைமையைப் பற்றி யோசிப்பதற்காக வைஸ்ராய் நிர்வாக சபை வெளிநாட்டு இந்திய இலாகா மெம்பர் டாக்டர் என். பி காரே ஜூலை 7-ந்தேதி புது டில்லியில் இந்திய பிரமுகர்களடங்கிய ஒரு மகாநாட்டைக் கூட்டியிருக்கிறார். இம்மகாநாட்டிற்கு வரும்படி ஜனாப் ஜின்னா, ஸ்ரீ ஸவர்க்கார், ஸர் தேஜ்பஹதூர் ஸாப்ரூ முதலியோர் அழைக்கப்பட்டிருக்கிறார்கள். ஜின்னா இதற்கு போக மறுத்துவிட்டார்.

* * * *

## நாட்டைத் துண்டாடுவது அநுபவ சாத்தியமல்ல

வகுப்பு சமரஸத்தை மூட்டைகட்டி வைத்துவிட்டு ஜனாப் ஜின்னா கண்ணாம்பூச்சி விளையாடி வருவதன் குட்டை வெளிப்படுத்தி முஸ்லிம் பாமர மக்களுக்கு விஷய ஞானம் புகட்டுவதற்காகவே முஸ்லிம்—மஜ்லிஸ் அமைக்கப்பட்டிருப்பதாக அதன் தலைவரும், வங்க ராஜாங்கசபை மெம்பருமான கான்பஹதூர் ஷேக் மகம்மது ஜான் பத்திரிகைகளுக்கு சமீபத்தில் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருக்கிறார்.

* * * *

## முஸ்லிம் லீக்-ஹிந்து மகாசபை சமரஸம்

ஸிந்து சுகாதார மந்திரி டாக்டர் ஹேமந்தாஸ் வத்வானி அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் ஜின்னாவைச் சமீபத்தில் கண்டு பேசினார். தாம் தயாரித்துள்ள ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைத் திட்டம் பற்றி அவர் ஜின்னாவுடன் விவாதித்ததாகத் தெரிகிறது. அடுத்த நடவடிக்கை என்னவென்றால் டாக்டர் வத்வானி அகில இந்திய ஹிந்து மகா சபைத் தலைவரான ஸ்ரீ ஸவர்க்காருடன் சம்பந்தம் கொள்ளுவதே எனக் கூறப்படுகிறது. பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு அளித்த ஒரு பேட்டியில் தாம் ஜின்னாவுடன் சம்பாஷித்ததால் நல்ல பலனேற்படுமென்று மிகுந்த நம்பிக்கையுடனிருப்பதாகவும் ஒற்றுமைக்காகத் தாம் சரியான வழியில் முயல்வதாகவே படுகிறதென்றும் டாக்டர் வத்வானி கூறினார்.

—::—

(முன் பக்கத் தொடர்ச்சி)

தல்ல. அதையே வெறும் சம்பிரதாயத்தை யொட்டி வேவலும் பாடுகிறார்.

பேச்சுக்கள் ஒரு புறமிருக்கட்டும். பேச்சுக்கு இது சமயமில்லை. ஜப்பானை எதிர்ப்பதற்கு இந்தியா நேச நாடுகளின் முக்கிய தளம். அவற்றிற்கு பர்மா, மலேயா நாடுகளை மீட்க வேண்டிய பெரும் பொறுப்பும் இப்போதேற்பட்டிருக்கிறது. அந்த நோக்கம் திருப்திகரமாகச் சித்திக்க வேண்டுமானால் இந்தியாவைச் சுணங்கி வாடும்படி விட்டிருப்பது முறையா? விவேகமா? ராஜ தந்திரந்தான் ஆகுமா? இதைத்தான் புதிய வைஸ்ராய் உடனே கவனிக்க வேண்டும். யுத்த காலத்திலேயே இந்தியப் பிரச்னையைத் தீர்க்க வேண்டாமென்பதில்லையென்றும் வேவல் சொன்னார். வெற்றுப் பேச்சால் மட்டும் காரியம் சாயாது. சொல்லுடன் செயலும் கூடினால் தான் விமோசனத்துக்கு வழி காணலாம். அதற்கான சந்தர்ப்பம் இப்போது வேவலுக்கு வாய்த்துளது. என்ன செய்வார் பார்க்கலாம்.

# போர் போகும் போக்கு

## நேசக் கட்சியின் முஸ்தீப்பு

ஐரோப்பியக் கடற்கரையில் துருப்புகளை இறக்க நேசக்கட்சி தீவிர முஸ்தீப்பு செய்து வருகிறது. துருப்புகளைக் கொண்டு போய் இறக்கக்கூடிய தனி வகையான படகுகள் வட ஆப்பிரிக்கத் துறைமுகங்களில் திரண்டு கொண்டிருக்கின்றன. பூர்வாங்கமாக ஸிஸிலி, ஸார்டினியா தீவுகளிலுள்ள தளங்கள் மீது நேச விமானங்கள் சரமாரியாகக் குண்டுகளைப் பொழிந்து வருகின்றன. இத்தாலியக் கடற்கரைப் பகுதியில் வசிக்கும் ஜனங்கள், படையெடுப்பை எதிர்பார்த்து வெளியிடங்களுக்கு மாற்றப்படுகின்றனர். இதே சமயத்தில் ஸிரியாவுக்கருகேயும் கடற்படை திரண்டுகொண்டிருக்கிறது. அப்படை ஏஜியன் கடலில் விரைவில் போர் நடவடிக்கை துவக்கலாமென்று ஜெர்மன் ரேடியோ அறிவிக்கிறது.

சென்ற வாரம் ஸிரியா-துருக்கி எல்லையை நேச அதிகாரிகள் திடீரென்று மூடி இரு தினங்களுக்குப்பின் மீண்டும் திறந்தனர். துருக்கி வழியாக பல்கேரியா மீதோ, கிரீஸ் மீதோ நேசப்படை பாயக் கூடுமென்று அப்போது வதந்திகள் கிளம்பின. எப்படியும் மத்தியதரைக் கடலின் மேற்குப் பகுதியிலோ, கிழக்குப் பகுதியிலோ நேசக் கட்சியினர் சீக்கிரத்தில் பெருவாரியான தாக்குதல் ஆரம்பிப்பரென்று திண்ணமாக எதிர்பார்க்கலாம்.

* * * *

## ஜெர்மன் விஷமம்

நேசக் கட்சியில் பிளவு உண்டாக்க ஜெர்மன் பிரசாரகர்கள் தீவிரமாக முயன்று வருகின்றனர். சமீபத்தில் ஸ்டாக்ஹாமில் ஜெர்மன்-ரஷ்ய சமரசப் பேச்சு நடந்ததாகவும், ஆனால் உக்ரேன் யாரிடமிருப்பதென்பது பற்றிய தகராறு காரணமாக அப் பேச்சு முறிந்து விட்டதென்றும் ஒரு செய்தி வெளியாயிற்று. ஆனால் இது ஒரு கட்டுக்கதையென்று பிறகு நிரூபணமாகிவிட்டது. ரஷ்யர் தங்கள் நாட்டைக் காக்க இரண்டு வருஷமாகப் போராடி லக்ஷக்கணக்கில் உயிர்ப் பலி கொடுத்திருக்கின்றனர். மேலும் நாஸிகளின் வார்த்தையை எந்நிலையிலும் நம்புவதற்கில்லை யென்பது அவர்கள் ஏற்கனவே கண்ட உண்மை. தற்காலிகமாக சமரசமேற்பட்டாலும் சிறிது காலத்திற்குப்பின், ஜெர்மன் படை பலம் முழுவேகத்துடனே தன் மீது திரும்புமென்று ரஷ்யாவுக்குத் தெரியும். எனவே அந்நாடு எதிரிகளுடன் சமரசம் செய்து கொள்வதென்பது சாத்தியமில்லை. அதற்கு மாறாக, இரண்டாம் போர்முனை ஏற்பட்டவுடன் தாங்கள் ஜெர்மனியரை முன்னேறித் தாக்கத் தயார் என்று ரஷ்ய அதிகாரிகள் ஒரு அறிக்கை விடுத்திருக்கிறார்கள்.

* * *

## ரஷ்யா-ஜெர்மன் சமாதான வதந்தி

பெரிய ஜெர்மன் உத்தியோகஸ்தர்களும், ரஷ்யப் பிரதிநிதிகளும் சமாதானத்தைப்பற்றி சம்பாஷித்ததாக வெளிவந்த செய்தி, "சுத்த அபத்தம்" என்று ஜெர்மன் செய்தி ஸ்தாபனம் ஜெர்மன் ரஷ்யா சமாதானப் பேச்சு ஸ்டாக்ஹோமில் நடைபெற்றதாக வெளிவந்த தகவலை மறுத்து ரஷ்ய செய்தி ஸ்தாபனமும் உத்தியோகமுறையில் அறிவிக்கிறது.

## படையெடுப்பு ஒத்திகை

மத்திய தரைக் கடல் பகுதியில் படையெடுப்பு ஒத்திகைகளை நேசத் துருப்புகள் நடத்தி வருவதாகவும், தென் ஐரோப்பியக் கரையில் ஜெர்மன், இத்தாலியத் துருப்புகள் அவசர அவசரமாகப் பந்தோபஸ்து ஏற்பாடுகளைச் செய்வதாகவும் ஆல்ஜியர்ஸ் ரேடியோ தெரிவித்தது.

* * * *

## அமெரிக்காவை கைப்பற்ற ஜப்பான் திட்டம்

மாஜி ஜப்பானிய தூதர் மிஸ்டர் ஜோஸப் க்ரூ ஓர் பத்திரிகா நிருபர்கள் கூட்டத்தில கூறியதாவது:—

அமெரிக்காவைத் தாக்கி அதைக் கைப்பற்றும் நோக்கத்துடன் 100 வருடகால போரை நடத்த ஜப்பானியத் தலைவர்கள் ஆலோசித்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் கைப்பற்றிய இடங்களைப் பலப்படுத்தவும், இயற்கைச் சாதனங்களை அபிவிருத்தி செய்யவும் நாம் அவகாசம் கொடுப்போமேயானால் அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யா இந்நாடுகளின் பலத்தை விட அதிகமாகவே ஜப்பான் பலமடையும். அமெரிக்க ஜப்பான் போராட்டம் மிகவும் நீண்டகாலமானதாகவும் கஷ்டமானதாகவும் இருக்கும்.

* * * *

## டோஜோ அறிக்கை

தற்போது சீனாவிலும், பர்மா-இந்திய எல்லைப்புறத்திலும் பஸிபிக் பிரதேசத்திலும் ஜப்பானியத் துருப்புகள் சண்டை போடுவதாக ஜப்பானிய சபையின் விசேஷக் கூட்டத்தில் பிரதம மந்திரி ஜெனரல் ஹிடேகி டோஜோ தெரிவித்தார்.

"இந்த யுத்தத்தை நமது நாடு கடைசிவரை உறுதியுடன் நடத்தும். ஜெர்மனியும் இத்தாலியும் அதன் நேச நாடுகளும் ஏற்கனவே கைப்பற்றிய இடங்

களைப் பத்திரப்படுத்திக் கொண்டுவிட்டதால் அவர்களுக்குத்தான் கடைசியில் வெற்றி உண்டு என்று நான் நிச்சயமாக நம்புகிறேன் என்றார் அவர்.

நிலைமை நெருக்கடியான கட்டத்தை எட்டி வருவதாகவும், பிரிட்டிஷ் அமெரிக்கத் துருப்புகள் மஹத்தான தாக்குதலை ஆரம்பிக்க ஏற்பாடுகளைப் பண்ணிக்கொண்டிருப்பதாகவும் அவர் கூறினார்.

* * * *

## துருக்கி தூதர் வாபஸ்

விச்சியில் இருந்த துருக்கிஸ்தானிகரை ஜெர்மன் ரகசியப் போலீஸார் பலவிதக் கடுமையான நிபந்தனைகளுக்குட்படுத்தியதால் அவர் அங்காராவுக்குத் திரும்ப அழைக்கப்பட்டார் என்பது துருக்கி ராஜீய காரியாலயத்திலிருந்து தெரிய வந்தது.

* * * *

## துருக்கி தென் எல்லையில் நேசப்படை

துருக்கி தெற்கு எல்லைப்புறத்தில் பெரிய பிரிட்டிஷ் படை குவிக்கப்பட்டிருப்பதாக ரோம் ரேடியோ அறிவிக்கிறது.

* * * *

## சீனாவின் சங்கட நிலை

ஜப்பானுக்கும் ரஷ்யாவுக்கும் சண்டை ஏற்படுமா என்று ஒட்டாவாவில் மாடம் சியாங்கே ஷேக் பத்திரிகா நிருபர்கள் கூட்டத்தில் வினவப்பட்டார்.

"ராஜீயக் கேள்விகள் காதல் பற்றிய கேள்விகள் போன்றவை. எதைப்பற்றி வேண்டுமானால் ஜோஸ்யம் கூறலாம். ஆனால் காதலைப்பற்றி மட்டும் ஏதும் சொல்ல முடியாது" என்றார் அவர்.

இதர நாடுகள் சீனாவிடம் அசிரத்தையாக இருந்த காலத்திலும் ரஷ்யா அதற்குத் துணையாக இருந்தது. இப்போது ரஷ்யா ஒரு மஹத்தானபோரில் ஈடுபட்டிருக்கிறது. ஆகவே தான் அதன் உதவி குறைந்திருக்கிறது. எங்களுக்கு விமான உதவி தேவை, எங்களுக்கு ஆள் பலம் இருக்கிறது. போர் புரியும் படை உற்சாகத்துடன் இருக்கிறது. பீரங்கிகள் வேண்டுகிறோம்"

வேறு ஒரு பிரசங்கத்தில் ஆறு வருஷங்களாக சீனா கடுமையாகப் போர் புரிந்து வருவதாகவும், அதற்கு வெளிநாடுகளுடன் தொடர்பே இல்லாது போய் விட்டதாகவும் கஷ்டம் மிகவும் அதிகரித்திருப்பதாகவும் இந்த நிலைமையில் அதிக காலம் போர் புரிய முடியாதென்றும், தவிரவும் சீன மக்களை நன்கு நடத்தப்போவதாக ஜப்பானியர் பிரசாரம் செய்து வருவதாகவும் இதனால் அதிக பாதகம் விளைவதாகவும் ஸ்ரீமதி சியாங்கே ஷேக் குறிப்பிட்டார்.

* * * *

## பினாமி சர்க்கார் தலைவரைக் கொலை செய்ய முயற்சி

ஜப்பானியர் ஆதிக்கத்தில் இருக்கும் நாங்கிங் சர்க்காரின் தலைவர் சிங்வீயை கொலை செய்ய முயற்சித்ததற்காக சில சீன யுவர்கள் தூக்கிலிடப்பட்டனர் என்று தெரியவருகிறது. தலைவர் பேசவிருந்த ஒரு மேடையில், இவர்கள் ஒரு வெடிகுண்டை வைத்திருந்தனர் எனக் கூறப்படுகிறது.

* * * *

## ரஷ்யமுறைக்கு ஆஸ்திரேலிய தூதர் ஆதரவு

ரஷ்யா தனியாக சமாதானத்தைக் கோரும் என்பது பிசகு எனவும் அந்நாட்டு மக்களைப் போல் திடமானவர்கள் உலகத்திலேயே இல்லை என்றும், ரஷ்யாவில் ஆஸ்திரேலிய தூதராக இருந்த மிஸ்டர் வில்லியம் ஸ்லேட்டர் தெரிவித்தார்.

மக்களுக்கு ரஷ்ய முறை அதிக நன்மையைப் பயப்பதாகவும் யுத்தத்திற்கப்புறம் எழும் பிரச்னைகளை ரஷ்யா சுலபமாகத் தீர்க்க முடியும் என்றும், அங்கு பல புதிய திட்டங்கள் உத்தேசிக்கப்படுவதால் வேலையில்லாத் திண்டாட்டங்கள் தலைகாட்டாவென்றும், கூட்டுப் பயிர் முறை திருப்திகரமானது என்றும், கோதுமை, கம்பளி முதலியவை விஷயமாகவும் இம் முறையை ஆஸ்திரேலியாவில் கையாளுவது உசிதம் என்றும் அவர் கூறினார்.

* * * * *

## வட ஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ் மன்னர்

பிரிட்டிஷ் அரசர் ஜார்ஜ் ஜும் யுத்த மந்திரி ஈடனும் ஆகாய மந்திரி ஸர் ஆர்ச்சிபால்டு சிங்கிளேரும் வட ஆப்பிரிக்காவுக்குச் சென்றிருக்கின்றனர். இவர்கள் வட ஆப்பிரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் முதலாவது, எட்டாவது படைகளையும், பிரிட்டிஷ் கடற்படையையும், பிரிட்டிஷ் விமானப்படையையும் பார்வையிட்டனர்.

* * * * *

## அமெரிக்காவில் வேலை நிறுத்தம்

வாஷிங்டனிலுள்ள ராய்ட்டரின் விசேஷ நிருபர் எழுதுவதாவது:—அமெரிக்காவிலுள்ள நிலக்கரிச் சுரங்கங்கள் வேலை செய்யாமல் வாளாவிருக்கின்றன. இதற்கு, சென்ற 2 மாத காலத்திற்குள் மூன்றுவது முறையாக "ஒப்பந்தமின்றேல் வேலையில்லை" என்ற கொள்கையை மேற்கொண்டு 5 லக்ஷம் சுரங்கத் தொழிலாளர் வேலைக்கு வராதிருந்துவிட்டதே காரணமாகும்.

அல்பாமா, பென்ஸில்வேனியா எஃகுத் தொழிற்சாலைகள் சில நாட்களுள் மூடப்படுமென்று தகவல் வந்திருக்கிறது.

மேல்பென்ஸில்வேனியாவிலுள்ள 117000 நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளரில் ஒருவர் கூட வேலைக்குச் செல்லவில்லை.

* * * * *

## துருக்கியில் கொடிய பூகம்பம்

இஸ்தன்பூலுக்குக் கிழக்கே 60 மைல் தூரத்திலுள்ள அடா

(32-ம் பக்கம்)




22

# வீண் முயற்சி



வ. வேணுகோபாலன்

முதல் நாள் மாலையில் மூர்ச்சையுற்ற பத்திரை அன்று முழுதும் எழுந்திருக்க வில்லை. வசந்தி அருகிலேயே இருந்து கண்ணீர்விட்ட வண்ணம் உபசரணைகள் செய்து கொண்டிருந்தாள். உடனிருந்து பல சேடியர்கள், பணிவிடை செய்தனர். நடந்த விவரங்களை யெல்லாம், வசந்தியால் உணர்ந்த மும்முடி நாய்கன், மனம் உடைந்து, பத்திரையைத் தேற்றிய வாறு அருகில் அமர்ந்திருந்தான். கன்னிமாடம் முழுதும் சோகக் களை ததும்பியது.

## விதியை யார் வெல்லுவார்?

பத்திரைக்கு உணர்வு சிறிதும் உண்டாகவில்லை. மெல்ல மெல்ல மூச்சு மட்டிலும் இயங்கிக் கொண்டிருந்தது. நினைவு வந்தவுடன் ஸத்துகனை எண்ணிப் பிரலாபித்துப் பிதற்றலானாள். அவள் உள்ளம் வெம்மையுற்றிருந்தது போலவே, வார்த்தைகளும், அவள் உடலும் வெம்மையுற்றிருந்தன. அவள் நிலையைக் காணுந்தோறும் நாய்கன் உள்ளம் உருகினான். வசந்தி உள்ளம் பதைபதைத்தாள். எவ்வளவு, சினமும், ஆற்றாமையும் வசந்திக்கு இருந்தனவோ, அவ்வளவும், பத்திரையிடம், பேரிரக்கமாகவும் அளவு கடந்த அன்பாகவும் மாறியது. ஸத்துகன் பிரிவால் பத்திரையின் உடல் வாடி மெலிந்து விட்டது. 'ஓரே நாளில்-ஒரு பொழுதில், பத்திரை, இப்படி இளைத்து, அழகு குன்றிப் போய் விட்டாளே!' என்று வருந்தினாள்; திகிலை உண்டாக்கியது வசந்திக்கு. 'இப்படியே இவள் இருந்தால் உயிரே போய் விடுமோ, என்னவோ? இவ்வளவும் அந்தப் பாவி ஸத்துகனால் அல்லவா? நான் அன்றே சொன்னேன்! ஆனால், அப்போது இவள் என்னுடன் வாதாடினாள். நான் எண்ணுவது சிறிதும் தப்புவதில்லை! ஆனால், விதியின் விளைவை யார்தான் வெல்லுவார்? நான் மணமாகிப் பின்னர் கைம்பெண் ஆனேன். இவள் கன்னிப் பருவத்திலேயே காதலனை இழக்கப் போகிறாள்! அந்தோ! இனி, ஸத்துகன் உயிருடன் வருவான் என்றால் யார்தான் நம்புவர்? யமனுலகு சென்றவன் திரும்பி வருவது உண்டா? ஆனால் அவனுக்குக் கொலைத் தண்டனை விதித்தாயிற்று என்று தெரிந்தால், மறு கணமே இவள் உயிரை விட்டு விடுவாள்!—இப்போது இவளைப் பார்க்கையில் அதற்கு முன்பே இவள் உயிர் போய்விடுமோ என்று சொல்லும்படியிருக்கிறது! விதி என்ன எண்ணியிருக்கிறதோ? அறியேன்' என்றவாறு சிந்தித்திருந்தாள் வசந்தி.

சூரியன் உதயமானான். செங்கிரணங்கள் சாளரங்கள் வழியே உள் புகுந்து பத்திரையின் மேனியில் திளைத்தன; அவ்வளவில் பத்



வள்ளுவன் யானைமீதிருந்தபடி "காளன் என்ற பெயருடன் களவு கொலை செய்துவந்த ஸத்துக சிரேஷ்டியை நாளையதினம் விசாரணை செய்து கொலைத்தண்டனை விதிக்கப் படும், இது அரசன் கட்டளை!" என்று முரசு கொட்டினான்.

திரையின் கரிய விழி மலர் திறந்தன; சந்திரனைக் கண்டு அலரும் குவளை, சூரியனைக் கண்டு மலர்ந்தது என்று சொல்லும்படி இருந்தது அது. அவள் தாமரை முகம் சூரியனைக் கண்ட பின்பும் பொலிவு பெறாமல், பனியால் கருகிய தாமரை போன்று அழகு குன்றியிருந்தது. கண்களில் நீர் ஊற்றுப் பெருக்கெடுத்தது. உள்ளிருந்து பொங்கியெழும் துக்கத்தை, விழுங்கி அடக்கிக் கொள்ள முயன்றாள். தன்னைச் சுற்றிலும் உள்ளவர்களை ஒரு முறை நோக்குவதற்குள் அவள் கண்கள் மீண்டும் மூடிக்கொண்டன. மீண்டும் விழித்தாள்; பத்திரை! பத்திரை!'' என்ற வார்த்தைகளே, நாய்கன்; வசந்தி இருவர் வாயிலிருந்தும் வெளி வந்தன. பத்திரை அதற்கு மறுமொழி கூறவில்லை. நீர்த் துளி பனிக்கும் கண்களால் துயரம் வெளிப்பட நோக்கினாள். தன் உடலில், உணர்ச்சியோ, வன்மையோ எதுவும் இல்லை என்றே அவள் எண்ணிச் சோர்வுகொண்டாள்.

### அவரா கள்வர் ?

கண்ணீர் பெருகிக் கன்னங்கள் வழியே ஓடி, பவளத்துண்டம் போலும் அவள் இதழ்களை நனைத்தன; அப்போது சற்றே பேச முயன்றாள்; ''கள்வரா அவர்!...அவர் கள்வரா?...தெய்வமே! இது உண்மையா?'' என்று துயரம் கிளர்ந்தெழ, பெருமூச்சு விட்டுக் கூறினாள். தலை குனிந்து வாய் திறவாமல் கண்ணீர் பொழிந்தாள் வசந்தி. பத்திரைக்குத் துக்கம் பெருகியது. தந்தையின் சோகம் நிறைந்த முகத்தைக் கண்டதும், விம்மிப் பொருமியவண்ணம் நாய்கனின் பாதங்களில், தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். நாய்கன், அதைக் கண்டு மனம் சகியாமல், துக்கம் நெஞ்சையடைக்க, பத்திரையின் நறு மலர்க் கூந்தலைத் தடவியவாறு, ''பத்திரை! பத்திரை! வருந்தாதே! முன்பு நான் சொல்லியதையெல்லாம் அலக்ஷியம் செய்தாய்! உன் கதி இவ்வாறு ஆகுமென்று கனவிலும் நான் கருதவில்லை! உனக்கு மணம் செய்வித்த பின்பு உள்ளம் குளிர உயிரைவிட வேண்டும் என்று எண்ணியிருந்தேன். தெய்வத்தின் நோக்கம் வேறாக இருக்கிறது! அந்த மாபாவி, ஸத்துகனை நம்பி மதியிழந்து இந்நிலை அடைந்தாய்! உன்னுடைய உள்ளம் குளிர்வதற்காக நானும், அவனை நம்பி மதியிழந்தேன்; மாயாவி! பாதகன்! என் குலத்தைக் கெடுக்க வந்த துரோகி! என் உள்ளத்தைத் தீராத புண்ணாக்கிய வஞ்சகன்! பழிபாவம் அஞ்சாப் பாதகன்! நான் என் செய்வேன்! போதி ஸத்துவா! முதுமைப் பருவத்தில் என்னை இவ்விதம் மீளாத் துயரத்தில் மூழ்கச் செய்துவிட்டாயே! அந்தோ! பத்திரை! அவன் வெளியழகைக் கண்டு அறிவிழந்து அல்லல் கொண்டாய்! காளன் என்ற பெயருடன், நீண்ட நாட்களாக எல்லையற்ற களவு கொலைகள் செய்து வந்த அவனை அரசன், இனி கொல்லாமல் விடுவானா? அரசன் இன்றே கொல்வான்! நீ ஏன் வீண் துயரம் அடைகிறாய்? அவனை நினைக்க நினைக்க என் உடலும் உயிரும் துடிக்கின்றனவே! பத்திரை! பத்திரை! இப்போதாவது உன் அறிவு தெளிவு பெற்றதா? அவனால் உன் வாழ்வே வீணாகிவிட்டதே! முகர்ந்தபின், கசக்கி எறியப்பட்ட மலர்போலாயிற்றே உன் நிலை! என் மனக் கோட்டைகள் தொடக்கத்திலேயே அடியற்றுத் தகர்ந்துவிட்டதே! உன் நிலையைக் கண்டு இனி யான் நீண்ட நாட்கள் உயிருடன் இரேன். உன்னைப் போதி ஸத்துவனே காத்தருள வேண்டும்...பாவி ஸத்துகா, நீ கொடும் பாவ நகரில் தவிக்க வேண்டும்'' என்று புலம்பினான்.

இரு கைகளாலும் முகத்தைப் பொத்தி, அதுகாறும் தேம்பித் தேம்பி அழுத பத்திரை வெறி பிடித்தவள்போல் எழுந்தாள். நாய்கனின் பாதங்களைத் தழுவிக் கொண்டாள். வசந்தியும் சேடியரும் திடுக்குற்று அகல நின்றனர்.

### பத்திரையின் முறையீடு

''தந்தையே! தாங்கள் இவ்வாறு கூறினால் நான் என் செய்வேன்! விதியின்படியே யாவும் நிகழும்! நேர்ந்தவற்றிற்கும் யாரும் காரணமல்ல. அவர் மீதும் குற்றமில்லை. என் மீதும் குற்றமில்லை. என்னையும் அவரையும் ஒன்றாக்குவித்த விதியின் மீதே குற்றம் கூற வேண்டும். அவரைக் கொல்லப் போகும் விதி அதற்கு முன்பே என்னையும் கொன்றிருக்க வேண்டும்! அவர் மீது எவ்வளவு பழிகள் ஏற்பட்டபோதிலும், நான் அவரை மறப்பது முடியாத காரியம்! என்னை அவரும் மறவார். அவரை நான் எந்த நிலையில், எந்த நினைவில், கண்டு காதலித்து மயங்கி அவருக்கு அடிமையானேனோ, அவ்விதமே இப்போதும் இருக்கிறேன். என் காதலில் சிறிதும் குறைவில்லை. அவர், எந்த நிலையில், எந்த நினைவில் என்னைக் கண்டு காதல் கொண்டாரோ அவ்விதமே இப்போதும் இருப்பார். அந்த நிலை என்றும் மாறாது. அவருக்கே நான் அடிமை! ஆனால் அது பொய்யாகாமல் நிலைக்க வேண்டும்! உடலுயிர் கலந்த எங்கள் உண்மைக் காதலைப் போதி நாதன் குறைவுபெறச் செய்யான்! என் சுக வாழ்வை நிலைத்திருக்கச் செய்வது தங்கள் கடமை; அதற்கு மாறாகத் தாங்கள் சிறிதும் எண்ணக்கூடாது! என் பிளவுற்ற இருதயத்தை மேலும் புண்ணாக்குவது நியாயமா? ஐயா என் வாழ்வை நலமுறச் செய்வது, தங்கள் கடமை யல்லவா? தங்களுக்கு என்மீது உள்ள அன்பு இப்போதன்றோ வெளிப்பட வேண்டும்? தாங்கள் உள்ளம் இரங்கி என்னைக் காக்காவிடில் என் வாழ்வு இன்றோடு முடிவுறும். என்னை......என்னை அவருக்கு உடையவளாகச் செய்ய வேண்டும். என் உயிர் நிலைத்திருப்பதற்காக—என் சுக வாழ்வுக்காக-தங்கள் உள்ளம் குளிர்வதற்காக-அவரை விடுதலை செய்விக்க வேண்டியது தங்கள் கடமை! என் உள்ளத்தில் பொங்குவதை வெளியிட்டுவிட்டேன். என் பிளவுற்ற இருதயத்திலிருந்து எழும் வார்த்தைகளைத் தாங்கள் நிச்சயம் நம்ப வேண்டும்; நான் வேண்டுவது இதுவே! இல்லையேல்...'' என்று நாய்கன் பாதங்களை கண்ணீரால் நனைத்தாள்.

### துரோகியை மீட்ப தெப்படி?

அவள் சொற்களைக் கேட்டு நாய்கன் திடுக்குற்றுத் திகைத்

(27-ம் பக்கம்)

# எல்லாம் விதிவசம்!



(எம். வி. பாலசுப்ரமண்யன்)

நான் என்று கலெக்டர் ஆபீசில் குமாஸ்தாவாக உத்தியோகம் ஏற்றுக் கொண்டேனோ அன்று முதலேயே கோபாலய்யர் என்னுடன் வெகு அன்யோன்யமாகப் பழக ஆரம்பித்து விட்டார்.

கோபாலய்யருக்கு வயது நாற்பதுக்குக் குறையாது. என் கண்களிற்கு அவரென்னவோ வயதானவராகக் காணப்பட்டாரே தவிர அவர் தன்னை இன்னும் மிக பால்யமென்றே நினைத்துக் கொண்டிருக்கிறார் என்பதை அவருடைய ஹேர்ஆயில் தடவி அழகாக வாரப்பட்ட கிராப்பும் நெற்றியில் ஜவ்வாதுப் பொட்டும், வாயில் கிரும்பு, ஏலக்காய், ஜாதிப் பத்திரி முதலியவைகளுடன் கலந்த மணம் பொருந்திய வெற்றிலை பாக்கும் மேலே போட்டுக் கொண்டு வரும் ஸில்க் ஷர்ட்டும் அதன் மேலிருந்து கிளம்பும் கம் என்ற வாசனையும்ஊர்ஜிதம் செய்தன.

ஆபீசில் புதிதாக வேலை ஒப்புக் கொண்டவுடன் எனக்கென்னமோ கண்ணைக் கட்டி காட்டில் விட்டமாதிரிதான் இருந்தது. ஆனால் கோபாலய்யர் தன் வேலையைக் கூட பொருட்படுத்தாது என் அருகில் இருந்து எனக்கு கொடுக்கப்பட்ட வேலைகளை யெல்லாம் நான் எப்படிச் செய்ய வேண்டுமென்று சொல்லிக் கொடுத்து எனக்கு மிகவும் ஒத்தாசை செய்தார். அதற்கு நான் அவருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். அவர் இந்த மட்டோடு நின்றிருந்தால் நான் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆனால், அவர் அடிக்கடி என்னிடம் வந்து யோக க்ஷேமம் விசாரிப்பதும், என் குடும்ப வரலாறுகளைக் கேட்பதும் ஏன் இது மட்டுமா? நான் வேண்டாமென்று சொன்னாலும் கேட்காமல் பிடிவாதமாய் என்னையும் கூட்டிக் கொண்டு போய் தான் கொண்டு வந்திருக்கும் டிபனில் எனக்கும் பாதி கொடுத்து தானும் சாப்பிடுவதை நினைத்தால் நான் எப்படி ஆச்சரியப் படாமல் இருக்க முடியும்? என்னைப் பற்றிய மட்டில் அவருடைய நடத்தை எனக்கு ஆச்சரியமாகவே இருந்தது. இடையிடையே மற்ற குமாஸ்தாக்கள் "டேய், ஆள் புதுப் பையனை காக்காய் பிடிக்கிறார் டோய்" என்று சொல்லிக் கொண்டதும் என் காதில் விழாமல் போகவில்லை.

அன்று சனிக்கிழமை. ஆபீசில் வேலை ஒன்றும் இல்லாததால் நாற்காலியில் சாய்ந்தபடியே ஏதோ பார்த்துக்கொண்டிருந்தேன். கோபாலய்யர் மெதுவாக வந்து எனக்குப் பக்கத்தில் மேஜையைப் பிடித்துக்கொண்டு நின்றார். "சரி, இனி இவர் யோக க்ஷேமம் விசாரிக்க ஆரம்பித்து விடுவார்...பாவம்...இவருக்கு வேறு வேலை ஒன்றும் இல்லையா?" என்று மனதிற்குள்ளேயே நினைத்துக்கொண்டு "வாங்கோ ஸார். உட்காருங்களேன்" என்றேன்.

"இல்லை. உன்னை ஒரு விஷயம்னு கேட்கணும். ஞாபகம் வந்த போது கேட்டால்தானே கேட்டது. நீ உன் ஜாதகம் இங்கு வைத்திருக்கிறாயோ?" என்று தந்திரமாகக் கேட்டார்.

"ஏன்? என்ன விசேஷம்"? என்றேன்.

'ஒரு வரன் விஷயமாய் வேண்டியிருக்கு' என்றார். வரன் என்ற வார்த்தைகளைக் கேட்டவுடன் எனக்கு சற்று கூச்சமாகத் தான் இருந்தது. "இப்பொழுது வரனுக்கென்ன ஸார் அவசரம்? இப்போது நான் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை" என்று சிரித்தபடி கூறினேன்.

"அட, அசடே. அதென்னடா அப்படிச் சொல்லிட்டே.. காலா காலத்திலே அததுகள் இருக்கவேண்டியபடி இருந்தால்தான் அழகு. உங்க அப்பா அம்மாவைக் கேட்டுப் பார் அவர்களுக்குத்தெரியும் இப்போது உனக்கு கல்யாணம் செய்யவேண்டுமா? வேண்டாமா? என்பது. எல்லாம் உன் நல்லத்துக்குத் தாண்டாகேட்கிறேன்" என்று எனக்கு புத்தி சொல்ல ஆரம்பித்துவிட்டார்.

எனக்கு என்ன சொல்வதென்று தோன்றவில்லை. என்னமோ பெட்டியில் பார்க்கிறேன். இருந்தால் கொண்டு வந்து தருகிறேன்" என்றேன்.

"சரி ஞாபகம் வைச்சுக்கோ. மறந்துவிடாதே" என்று சொல்லிவிட்டு மெதுவாகக் கிளம்பினார்.

நானும் சட்டென்று "அதெல்லாம் சரிதான் பெண்யார்?" என்றேன். "அதற்கென்ன. இன்று சாயந்திரமே நேரில் பார்த்து விட்டால் போகிறது" என்றார்.

"இல்லை. இல்லை. நீங்கள் சொன்னாலே போதும்" என்றேன்.

"பெண்யாரோ? எவளோ? என்று மலைக்காதே. என்னுடைய பெண்ணுக்காகத்தான் கேட்டேன்" என்றார். அவரிடமிருந்து இந்தமாதிரி பதிலை நான் எதிர் பார்க்கவே இல்லை. என்ன உங்கள் பெண்ணுக்கா?" என்றேன். அதற்குமேல் என்ன பேசுவதென்பது எனக்கு விளங்கவில்லை. ஆனால் இவ்வளவு நாளாக கோபாலய்யர் என்னை காக்காய் பிடித்து வந்ததின் காரணம் மட்டும் விளங்கி விட்டது.

மணி "டாண்" என்று ஐந்தடித்தது. "அட, மணி ஐந்தாகிவிட்டதே. சரி கிளம்பப்பா வீட்டுக்குப் போகலாம். இதோ நானும் எல்லாவற்றையும் எடுத்து வைத்துவிட்டு வந்து விடுகிறேன்" என்று சொல்லி

விட்டு போய்விட்டார் கோபாலய்யர். நானும் எல்லாவற்றையும் அப்படியே எடுத்துவைத்துவிட்டு வீட்டுக்குப் புறப்பட்டேன்.

ஆபீசிலிருந்து வரும் வழியெல்லாம் "கிருகஸ்தாச்ரமத்தின் பெருமைகளைப்பற்றியும், நான் ஏன் இனி பிருமசாரியாக இருக்கக் கூடாதென்பதற்கும் காரணங்கள் கூறி எனக்கு உபதேசம் செய்துகொண்டே வந்தார் கோபாலய்யர். நானும் எல்லாவற்றிற்கும் 'சரி சரி' என்று தலையாட்டிக்கொண்டே நடந்தேன்.

கோபாலய்யர் வீடு கிட்ட நெருங்கவே நான் "சரி, நீங்க போய் விட்டு வாங்கோ, நானும் ரூமுக்குப் போகிறேன்" என்றேன்.

"அதற்குள்ளே ரூமிலே போய் என்னப்பா செய்யப் போரே. வா...கொஞ்சம் நம்மாத்திலே காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்றார்.

"அதனாலே பரவால்லே ஸார் நான் வரேன்" என்று சொல்லிவிட்டு மெதுவாக நகர்ந்தேன்.

"அட, சரி தான் வாப்பா" என்று சொல்லி என் கைகளைப் பற்றி இழுத்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்தார். நானும் வேறு வழியில்லாது அவரைப் பின் தொடர்ந்தேன்.

* * * *

உள்ளே யாரோ மிகவும் இனிமையாக சக்ரவாக ராகத்தில் "ஈசனே இந்த ஏழைக்கிரங்க இன்னும் தாமதமா" என்ற பாட்டை பாடிக்கொண்டிருந்தார்கள் "ஆஹா!! அந்த மதுரமான குரல் என் ஹிருதயத்தினுள் ஊடுருவிச் சென்று என் மனத்தில் என்னென்ன உணர்ச்சிகளை எழுப்பின! வீட்டுக் கூடத்து வரையில்சென்றேன்! மகுடியின் முன் கட்டுண்ட நாகம்போல் என்னால் அதற்கு மேல் நகர முடியவில்லை. என் மனமோ "ஆஹா! இவ்வளவு இனிமையாகப் பாடும் அந்தக் குயில் தான் யார்? அவள் தான் கோபாலய்யரின் பெண்ணோ?" என்ற சிந்தனையில் ஆழ்ந்தது. அதே சமயம் என் கண் முன் பதினேழு வயது மதிக்கத்தக்க ஓர் பெண் பாடியபடியே மெதுவாக ஊஞ்சல் ஆடிக் கொண்டிருப்பது தென்பட்டது. அடாடா! அவள் தான் என்ன அழகு!! குயிலினுமினிய குரலும் அதற்கேற்ற அழகும் ஒருங்கே அமையப்பெற இவள் தான் முன் ஜன்மத்தில் எத்தனை தவங்கள் செய்திருக்க வேண்டும்! இவள் மட்டும் கோபாலய்யரின் பெண்ணாக இருந்து எங்கள் ஜாதகங்களும் பொருந்தி விட்டால் என்னை விட பாக்யசாலி இந்த உலகில் வேறு யார்?!" என்று நினைத்துக்கொண்டேன்.

இவ்வளவு உணர்ச்சிகளும் எண்ணங்களும் என் மனதில் பளிச்சென்று தோன்றி மறைந்தன.

புது மனிதனாகிய என்னைக் கண்டவுடன் அவள் சட்டென்று தன்பாட்டை நிறுத்திக்கொண்டு எழுந்து நின்றாள். "ராஜீ, இதோ இந்த நாற்காலியில் உட்கார்ந்துக்கோ. இதோ வந்துவிட்டேன்" என்று என்னைப் பார்த்து சொல்லிவிட்டு "கமலா, இங்கே வா" என்று சொல்லி, இவ்வளவு தூரம் என் உள்ளக் கிளர்ச்சிகளுக்குக் காரணமான அவளையும் அழைத்துக்கொண்டு உள்ளே சென்றார் என் சிநேகிதர். நானும் அவர்கள் சென்ற திக்கையே பார்த்துக்கொண்டு பக்கத்தில் இருந்த நாற்காலியில் அமர்ந்தேன்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவர்மட்டும் திரும்பி வந்தார். சட்டையைக் கழற்றிவிட்டு என் அருகில் உட்கார்ந்து ஏதோ பேச ஆரம்பித்தார்.

என் ஞாபகம் பூராவும் வேறு இடத்தில் லயித்திருக்கும் போது அவர் என்னென்ன பேசினார் என்பது எனக்கெப்படித் தெரியும்? என்னை வெகு நேரம் அவள் அந்த நிலையில் விட்டுவைக்கவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் அவளும் என்முன் தோன்றினாள். இப்போது அவள் சும்மாவரவில்லை.

(25-ம் பக்கம்)

பாரதி புதுவைநிகழ்ச்சி

# குயில்—அல்லது பகற் கனவு



## ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி

ஓர் பெண் குயில் மரத்திலுட்கார்ந்து பாடுகிறது. என்ன குரல். அந்தக் குரலைக் கேட்டால், உள்ளத்தில் உணர்ச்சிக் கனல் பெருகுகின்றது. அமுதத் துளி வர்ஷிக்கிறதா? மின் சார சக்தி இனிமையும் சுவையும் பெற்று குயிலின் குரலாகத் தோன்றுகிறதா? ஆகாச மோகினி தான் ஓர் குயிலுருவம் பெற்று வந்து பாடுகிறாளா? எல்லா ஜனங்களையும் உணர்ச்சியற்றுப் போகும்படி செய்ய மோகினியால் தான் முடியும். கொடிய அரக்கரை மயக்க மஹாவிஷ்ணு மோஹினி அவதாரம் செய்தார். தாருகா வனத்தில் தவம் செய்த ரிஷிகளை மோகினிருபம் கொண்டு வெறி கொண்டு ஓட்ச் செய்தார் பரமசிவன். பிசாச வர்க்கத்திலும் கூட "மோஹினி" பிசாசுக்குத்தான் மதிப்பு அதிகம். பயமுறுத்தி வசப்படுத்துவதைக் காட்டிலும் மோஹிப்பித்து வசப்படுத்தல் சுலபம்.

"வேடர் வராத
விருந்துத் திருநாளில்,
பேடைக் குயிலொன்று
பெட்புறவோர் வாள் கிளை [யில்
வீற்றிருந்தே ஆண் குயில்கள்
மேனி புளகமுற
ஆற்றலழிவுபெற
உள்ளத் தனல் பெருக
சோலைப் பறவை யெலாஞ்
சூழ்ந்து பரவசமாய்
காலைக் கடனிற் கருத்தின்றிக்
கேட்டிருக்க
இன்னமுதைக் காற்றிடை
எங்கும் கலந்தது போல்
மின்னல் சுவை தான்
மெலிதாய், மிகவினிதாய்

வந்து பரவுதல் போல் வானத்து மோகினியாள்

இந்த வுறுவெய்தித் தன்
ஏற்றம் விளக்குதல்போல்
இன்னிசைத் தீம்பாடல்
இசைத்திருக்கும் விந்தைதனை
முள்ளிக் கவதை வெறி
மூண்டே நளவழிய
பட்டப் பகலிலே
பாவலர்க்குத் தோன்றுவதாம்
நெட்டைக் கனவினிகழ்ச்சி
யிலே-கண்டேன் யான்"

இசை வெள்ளத்தில் முழுகி மகிழ்ந்து மனித ஜன்மத்தில் நம்முடன் கூடி வாழ உகந்த காதலி கிடைக்கவில்லை. கடவுளே! குயிலுருவம் கொடுக்க மாட்டாயா? இந்த சங்கீதத்தையே ரஸித்து வாழ்ந்து அதிலேயே இறப்பேன். எப்படி ஈயானது ஜாடியிலுள்ள ஷர்ப்பத்திலேயே விழுந்து விடுகிறதோ, அதைப்போல.

இந்தக் கானமுதத்தைத் தேவர்களும் அருந்தியிருக்க மாட்டார். இந்தச் சுவைக்கு முன்னால் அவர்கள் புசிக்கும் அமிர்தம் எம்மாத்திரம்? அந்தப் பெண் குயிலின் பாட்டில் ஆழ்ந்த பொருள் நிரம்பியிருக்கிறது. உலகத்தாருக்கு அதன் அர்த்தத்தை ஒருவாறு கூற முடியும். குரலினிமைக்கு நான் எங்கு செல்வேன்?

கன்னிக் குயிலன்று
காவிடத்தே பாடியதோர்
இன்னிசைப் பாட்டினிலே
யானும் பரவசமாய்
மனித உருநீங்கிக் குயிலுருவம்
வாராதோ?
இனிதிக் குயிற் பேட்டை
என்றும் பிரியாமல்
காதலித்துக் கூடிக் களி
யுடனே வாழோமோ
நாதக் கனவினிலே நம்முயி
ரைப் போக்கோமோ?".
என்று பல வெண்ணியேக்க
முறப் பாடிற்றால்
அன்று நான் கேட்ட தமர்
தாம் கேட்பாரோ
குக்குக்கு வென்று குயில்
பாடும் பாட்டினிலே
தொக்கப் பொருளெல்லாம்
தோன்றிய தென் சிந்தைக்கே
அந்தப் பொருளை அவனிக்
குரைத்திடுவேன்
விந்தைக் குரலுக்கு மேதினி
யிர் என் செய்கேன்!
குயிலின்—பாட்டு.

காதல்:—அன்பு இல்லா விடில் வாழ்க்கை பிணத்திற் கொப்பாகும். ஒளி:—அருள் உடையவன் முகத்தில் ஜ்வலிக்கும். அது இல்லா விட்டால் இருள் சூழ்ந்து விடும்.

இன்பம்:—எல்லையில்லாத பேரின்பம். இன்பத்திற்கு எல்லைக் கண்டால் உலகம் துன்ப மயம்.

வீணை:—வாசிக்கும் விதமாக வாசித்தால்—மனிதன் தொண்டையோ என்று தோன்றும். அதில் ஒரு விரிசல் கண்டால் நாதம் சேதமாகி விடும்.

தாளம்:—ஒரு சிறு தடையுண்டானாலும் பின்பு கூளம் தான். அல்லது பேதாளம் தான். இவ்விதம் பண், புகழ், உறுதி யாவிற்கும் ஒரு சிறிது தடைப்பட்டாலும் பிரயோசனப்படாது. எல்லாவற்றிற்கும் அடிப்படையான அன்பில்லாவிடில் இறப்பதே நன்று.

"காதல்—காதல், காதல்,
காதல் போயிற்
காதல் போயிற்
சாதல் சாதல் சாதல்
அருளே யா நல்லொளியே,
ஒளி போமாயின்,
ஒளி போமாயின்
இருளே இருளே இருளே.
இன்பம், இன்பம். இன்பம்.
இன்பத்திற் கோ
ரெல்லை காணில்
துன்பம், துன்பம், துன்பம்.

நாதம், நாதம். நாதம்.
நாதத் தேயோர்
நலிவுண்டாயின்
சேதம், சேதம், சேதம்
தாளம், தாளம், தாளம்.
தாளத் திற் கோர்
தடையுண்டாயின்
கூளம், கூளம், கூளம்.
பண்ணே, பண்ணே, பண்ணே.
பண்ணிற்கே யோர்
பழுதுண்டாயின்
மண்ணே, மண்ணே, மண்ணே.

புகழே, புகழே.
புகழே.
புகழுக்கே யோர்
பொறையுண்டாயின்
இகழே. இகழே,
இகழே,
உறுதி, உறுதி,
உறுதி.
உறுதிக்கே யோர்
உடைவுண்டாயின்
இறுதி, இறுதி.
இறுதி
கூடல், கூடல்,
கூடல்
கூடிப் பின்னே
குமரன் போயிற்
வாடல், வாடல்,
வாடல்.
குழலே, குழலே,
குழலே.
குழலிற் கிறல்
கூடுங்காலை
விழலே, விழலே,
விழலே. (காதல்)

# யுத்தம்: இரகசிய ஆயுதம்

★

நியாயவாதி

புதிய போர் முறைகளையும் புதிய ஆயுதங்களையும் உபயோகித்தால்தான் வெற்றி கிட்டும் என்பதை யுத்தத்தில் குறியுள்ள ஒவ்வொரு ராஜாங்கமும் உணர்ந்திருக்கிறது. அவை விஷயமாக கோடிக் கணக்கில் பணம் செலவுசெய்யப்படுகிறது. பிறநாடுகளில் அவை ஸம்பந்தமாய் உளவுவறிய அதன் ஒற்றர்கள் சஞ்சரிக்கின்றனர். விஞ்ஞான சாஸ்திரிகள் இரவு பகலும் ஒழிவின்றி உழைக்கின்றனர். அவர்களது ஆராய்ச்சிச் சாலைகளில் செய்யப்படும் சோதனைகளின் பயனாக நூதனமான இரகசிய ஆயுதம் ஏதேனும் தனக்குக் கிடைக்குமோ என்று ஆவல்கொள்ளாத வல்லரசும் தற்காலத்தில் உண்டா?

புதிய ஆயுதத்தின் உபயோகத்தால் யுத்தத்தின் போக்கே மாறியிருக்கிறதென்பதற்கு சரித்திரத்தில் பல அத்தாக்ஷிகளைக் காணலாம். டுரோஜன் யுத்தத்தில் கிரேக்கர்களுக்கு இறுதியில் வெற்றி சித்தித்தது அவர்களால் உபயோகப்படுத்தப்பட்ட "மரக் குதிரை"யால் தான் என்பதை எல்லாரும் அறிவர். நேர்முகமாய் அவர்களுக்கு ஜயம் கிடைக்கவில்லை. அவர்களில் மதியூகியான யூலிஸஸின் யோசனைப்படி ஒரு பிரம்மாண்டமான குதிரை மரத்தால் செய்யப்பட்டது. பலமாயிருந்த அதன் வயிற்றில் சில போர் வீரர்கள் ஒளிந்து கொண்டனர். குதிரையை யுத்த களத்தில் விட்டுவிட்டு கிரேக்கர்கள் பின்னடைந்ததாக போக்கு காட்டினர். அவர்கள் யுத்தத்தை கைவிட்டுச் சென்றதாக எண்ணிய அவர்களது எதிரிகள் தங்களது கோட்டைக்கதவுகளை திறந்து கொண்டு வெளி வந்து குதிரையை இழுத்துக்கொண்டு உள்ளே வைத்தனர். அன்று இரவு அக்குதிரையிலுள்ள வீரர்கள் வெளியே வந்ததும் கதவுகளை திறந்து விட்டு வெளியே ஒளிந்துகொண்டிருந்த கிரேக்க படைகளை உள்ளே விட்டு டிராய் நகரத்தை வசப்படுத்திக் கொண்டதும் ஹேபி மாது காவ்யத்தில் அற்புதமாய் வர்ணிக்கப்பட்டுள்ளன.

கடல் யுத்தத்தில் காரத்தேஜ கப்பல் வீரர்களை ஜயிக்க முடியாமல் திண்டாடிய ரோமன சிப்பாய்கள், தொங்கும் பாலங்களை அமைத்து அவர்களை இறுதியில் வென்றனர் என்று ரோமபுரி சரித்திரம் கூறும். இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் ஆரம்பமான நாலு வருட யுத்தத்தில் முதலில் ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றதன் காரணம் அவர்களது வில்வீரர்களின் ஆயுதத் திறனேயாம். இன்னும் வேறு உதாரணங்களை எடுத்தால் இக்கட்டுரை விரியும்.

சென்ற மகாயுத்தத்தில் நூதனமாய் உபயோகத்துக்குக் கொண்டு வரப்பட்ட ஆயுதங்கள் மூன்று குறிப்பிடத் தகுந்தவை. அவை யாவன:— (1) பிரம்மாண்டமான பீரங்கிகள் (கெய்ஸரது "பெரிய பர்தா" என்பது தான் அவை போலும்) (2) டாங்கிகள் (3) விஷவாயுப் பிரயோகம். ஸப்மரீன்களது தொல்லையும் அந்த யுத்தத்தில் தான் ஆரம்பமாயிற்று. ஆகாய விமானத் தாக்குதல்களும் முதல் முதலாக உபயோகத்துக்கு வந்தன.

சென்ற யுத்தத்தினால் அனுபவ முதிர்ச்சி பெற்ற போர் நிபுணர்களும் ஹிட்லரது

போர்முறைகளை எதிர்பார்த்திருக்கமாட்டார்கள். அவரது மின்னல் தாக்குதல்களும், அவரது ஆகாயவிமானப் படையின் அசுரக் கொடுமைகளும் அவரால் கையாளப்பட்ட டாங்கி அணிவகுப்பும் ஆரம்பத்தில் அவருக்கு வெற்றிக்கு மேல் வெற்றியை அளித்ததில் யாதொரு வியப்புமில்லை. கடலிலும் அவரது ஸப்மரீன்களில் தொல்லை அசாத்தியமாய் இருந்தது; ஜெர்மனியால் முதல் முதல் உபயோகிக்கப்பட்ட மின்சாரச் சுரங்கங்களால் நேசதேசங்களது கப்பல் சேதம் மிகவும் அதிகமாய் ஏற்பட்டது.

1939-ம் வருடம் ஆகஸ்டு மாதத்திய போலிஷ் யுத்தத்தை முடித்துக் கொண்ட பின் ஹிட்லர் ரீச்ஸ்டாக் என்ற சட்ட சபையில் பிரசங்கம் செய்கையில் தன்னிடம் ஒரு பயங்கரமான இரகசிய ஆயுதம் இருப்பதாயும் தனது எதிரிகளான இங்கிலாந்தும் பிரான்ஸும் வழிக்கு வராவிடின் அதை உடனே உபயோகிப்பதாயும் பயமுறுத்தினர். ஆனால் அவ்வாயுதம் என்னவென்பதை அவர் விவரிக்கவில்லை.

உலக ஆதிக்கத்தை விரும்பும் ஒவ்வொரு சர்வாதிகாரியும் அத்தகைய இரகசிய ஆயுதத்தைக் கண்டு பிடித்து உபயோகிக்க ஆசைப்படுகிறான். அதற்காக அவன் எவ்வளவு விலை கொடுக்க வேண்டுமானாலும் தயாராய் இருக்கிறான். புதிய புதிய கொல்லும் ஆயுதங்களைக் கையாள அவன் விரும்புகிறான். அவன் அதிகாரம் செய்யும் தேசத்தில் விஞ்ஞானிகளுக்கு ஓய்வு ஒழிவில்லை.

யுத்தம் ஆரம்பமாவதற்கு சில மாதங்களுக்கு முன் ஒரு ஆங்கிலேய வேவுகாரன் பெர்லினில் ஒரு மோட்டாரில் போய்க்கொண்டிருந்தான். திடீரென்று அவன் வண்டி நின்றது. அதற்குக்காரணம் தெரியவில்லை. உடனே அவன் வண்டியை விட்டு இறங்கி அதன் என்ஜினை பரிசோதித்தான். அதில் யாதொரு பிசகுமில்லை. வண்டி நின்றதற்கு என்ன காரணம் என்று யோசனை செய்து கொண்டு சுற்றுமுற்றும் நோக்கினான். தனது மோட்டாரைப் போலவே தெருவில் மற்ற மோட்டார் வண்டிகளும் நின்றுகொண்டிருந்தன. பத்து நிமிடங்களுக்குப் பின்னர் தான் எல்லா வண்டிகளுக்கும் புறப்படும் சக்தி வந்தன.

இது விஷயமாக அவன் ஆராய்ந்ததில் அவனுக்கு ஒரு அதிசயத் தகவல் கிடைத்தது. அது என்னவெனில் யந்திர சக்தியை தடைப்படுத்தக்கூடிய நூதனமான விசையை ஜெர்மன் விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கின்றனர் என்பதும் அது ஸம்பந்தமாய் அதன் சர்க்காரின் மேற்பார்வையில் பல சோதனைகள் நடைபெற்றன என்பதுமே. அவனது மோட்டார் வண்டி நின்றது அச்சோதனைகளில் ஒன்றின் பயனால் போலும். ஆங்கில வேவுகாரன் கலக்கத்துடன் தனது நாடு திரும்பினான். யந்திர சக்தியை தடை செய்யும் முறைகளை ஜெர்மன் கண்டு பிடித்து விட்டால் அதனால் அதற்கு எவ்வளவோ அனுகூலங்கள் ஏற்படுமே என்று கவலைகொண்ட அவன் ஆங்கில விஞ்ஞானி ஒருவனிடம் சென்று விஷயத்தைத் தெரிவித்தான். அவ்விஞ்ஞானி புன்னகையுடன் "நீ பயப்படுவதற்குக் காரணம்இருக்கிறது. ஆனாலும் இதையும் நீ அறிந்தால் உன் பயம் ஒரளவு தணியும் என்று நினைக்கிறேன். யந்திர விசையைத் தடை செய்வதைத் தடுப்பதற்கு கவசங்கள் இருக்கின்றன. அலுமினியத்தையும் ஈயத்தையும் உருக்கி அவற்றின் வார்ப்பை யந்திரங்களுக்கு கவசங்களாய் பூட்டினால் யந்திர விசையை எதிலும் தடைசெய்ய முடியாது" என்றான்.

முடிவில் குறிப்பிடவேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது. அது என்னவெனில் "கொல்லும் கிரணம்" என்று கூறப்படும் அதிசய ஆயுதமே. அந்த ஆயுதம் இதுவரையில் கண்டுபிடிக்கப்படவில்லை. அது கண்டு பிடிக்கப்பட்டு கையாளவும் பட்டால் மனித சமூகத்துக்கு ஏற்படும் அபாயம் இவ்வளவு அவ்வளவு அல்ல. அதன் உபயோகத்தால் ஒரு நாட்டின் சர்வாதிகாரி உலக சர்வாதிகாரியாக எளிதில் ஆய்விடக்கூடும். அத்தகைய விபத்து உலகத்துக்கு ஏற்படக் கூடாது என்று ஈசுவரனை பிரார்த்திப்போமாக.

---

சிறு கதை

# ராஜத்தின் மாமியார்

★

(ரா. வெங்கடராமன்)

செல்லம்மாள் காலையிலிருந்து தன் பெண் வீட்டிற்குப் புறப்பட சாமான்களைத் தயார் செய்து கொண்டிருந்தாள். அம்மியும், உரலும் அண்டாவும் அடுப்பும்தான்பாக்கி. இரண்டு மாதங்களுக்கு முன் திருவிழாக் கடையில் வாங்கி வைத்திருந்த கற்சட்டி முதல் பக்கிரிச்சி ஊத்திக்கொடுத்த ஆமணக்கு எண்ணெய் வரையில் 'பாக்' செய்தாகி விட்டது. பிள்ளையாண்டான் வந்து ரயிலேற்றி விடவேண்டியதுதான்!-கிளம்பி விடுவாள் ஊருக்கு.

முதல் நாள் சாயங்காலம் நாட்டுப்பெண்ணுடன் சண்டை போட்டுக்கொண்டாள். பெண் ஞாபகம் வந்து விட்டாலே வீட்டில் ஏதாவது சண்டைதான்! அதை வியாஜமாக வைத்துக்கொண்டு, "நான் போறேண்டியம்மா! இந்த வீட்டில் ஒரு க்ஷணங்கூட என்னாலே இருக்க முடியாது. பிள்ளையாண்டானே ஒண்ணையும் காதிலேயே போட்டுக்கறதில்லே" என்ற பல்லவியுடன் மூட்டை கட்ட ஆரம்பித்து விடுவாள்.

அன்று சாயங்காலம் ராஜம் எதிர்வீட்டு பத்மா, மீனு இவர்களுடன் கோவிலுக்குக் கிளம்பிப் போனாள். போகு முன் அவள் அலங்காரம் செய்து கொள்ள ஒரு மணி நேரம் பிடித்தது. பின்னலை பிச்சோடா போட்டு எடுப்பாக முல்லைப் புஷ்பங்களை வைத்து வளைத்து முடிந்துகொண்டாள். துல்லியமான முகத்தில் லேசாக 'டீலக்ஸ் டால்கம் பௌட'ரைப் படியச் செய்தாள். பளிச்சென்று குங்குமமிட்டுக்கொண்டாள். ஜிமிக்கியைக் கழற்றி டாலரை அணிந்துகொண்டாள். கறுப்புப் பட்டுப் புடவையின் ஜரிகை பார்டரை பாம்பு சுற்றியிருப்பது போல வளைத்து அழகாக உடுத்திக்கொண்டாள். 'லைட் ரோஸ் ஜாக்கெட்'டும் மற்றப்படி எப்பொழுதும் உள்ள நகைகளும் அவளுடைய அழகை எடுத்துக் காட்டின. இவற்றை அவள் ஒன்று மாற்றி ஒன்றாக அணிந்து கொள்ளும் போதெல்லாம் செல்லம்மாளுக்கு வாய் முணு முணுக்க ஆரம்பித்தது. இத்தனைக்கும் அன்று அவள் ஸினிமாவுக்குப் போகும் பாணியில் உடுத்திக் கொள்ளவில்லை. அதற்கென்றால் ஸ்லிப்பர் வேண்டாமா? தனி அலங்காரம் வேண்டாமா?

ராஜம் ஒன்றையும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. வயசானவர்கள் சிறு பெண்களை—அதுவும் தம் நாட்டுப் பெண்களைக் கண்டாலே இப்படித்தான் ஏதாவது தொண தொணப்பார்கள் என்ற எண்ணம் அவளுக்கு.

கோவிலுக்குப் போய் விட்டு இரவு ஏழரை மணிக்குத்தான் திரும்பி வந்தாள். வந்ததும் மாமியாருக்குப் பலகாரம் செய்ய அடுப்பை மூட்டினாள்.

செல்லம்மாள் உள்ளே வந்து "எதுக்கு அடுப்பைப் பற்ற வைக்கிறே?" என்றாள்.

"ஏன் உங்களுக்குப் பலகாரமில்லையா?"

"வேண்டாம் நீ ஒண்ணும் பலகாரம் செய்ய வேண்டாம். விழுப்பு, மடி ஒன்னும் கிடையாது இந்த வீட்டில்! அவன் மேலேயும் படறது கோவிலுக்கும் குளத்துக்கும் போயிட்டு வந்து விழுப்போடே என்ன செய்யறது! யாருக்குத் திங்கணும் இந்தப் பலகாரமெல்லாம்? எல்லாம் ஒண்ணடி மண்ணடிதான்!" என்றாள்.

ராஜம் தயங்கினாள்: 'பலகாரம் செய்து வைத்து விட்டுக் கூடப் போயிருக்கலாமே' "வேறு என்ன செய்வது? இரண்டு பழம் வேணுமானா வாங்கிண்டுவரச் சொல்லட்டுமா அவரை?" என்று கேட்டாள்.

"வேண்டாம், வேண்டாம். அவனைக் கேட்க நீ என்ன சிபாரிசு! அவனுக்கும் நான் அம்மா எப்படிப் போனாலென்ன?



ஏனோ தானோன்னு தானே இப்ப இருக்கான். அப்படியே இருந்துக்கட்டுமே!''

ராஜத்திற்கு ஏதோ சிறிய புயல் வீச ஆரம்பித்திருக்கிறது போலத் தோன்றியது. அவள் கலங்கிய குரலில், ''எதுக்கு இப்படியெல்லாம் பேசறேள், உங்கபிள்ளை அப்படி ஒன்றும் நினைக்காத போதே...''

''அவன் நினைக்காதவன் தான். நினைக்கும்படியாத்தான் அவனைச் செய்தாச்சே.''

ராஜத்திற்கு ஆத்திரம் வந்தது. வெளியில் பக்குவமாகக் காட்டத் தெரியவில்லை. ஆகையால் சற்றுப் பேசாமலிருந்தாள். மனசு கேட்கவில்லை. எதையெல்லாமோ சொல்லித் தீர்க்கவேண்டும் போலிருந்தது. வார்த்தைகள் நிலை கொள்ளாமல் வெளி வந்தன:

''நல்லத்துக்குக் காலமில்லை இது. நானா அவரை அப்படி நினைக்கும்படியாகச் செய்தேன்?''

''நீ செய்யாட்டா? உன்னாலேதான் நினைக்காமே இருக்கான். இருக்கறதும் இல்லாததையும் ஒண்ணுக்கு நாலாச் சொல்றது, இல்லாட்டா ஒரு நிமிஷம் நான் பேசாட்டா சும்மா இருப்பானோ? பெண்டாட்டி யாத்தா பெரியாத் தான்னு போயிட்டுது.''

ராஜத்துக்கு கோபத்தோடு லஜ்ஜையும் சேர்ந்து வருத்தத்தைக் கொடுத்தது. மாமியாருக்குத் தன்மேல் அகாரண மான அசூயை ஏற்பட தன் கணவனின் வரம்பு மீறிய அன்பு தான் காரணம் என்பது புலப்பட்டது. அதனால் நாணம் சிறிது உண்டாயிற்று; ஆனால் அடுத்த கணமே தான் எவ்வளவுதான் தன் மாமியாரிடம் பயபக்தியுடன் விசுவாசமாய் நடந்து கொண்டாலும் பொல்லாப்புப் பெயர் தனக்கே தான் கிடைக்கிறது என்ற கோபம் மேலிட்டது.

''இந்தாங்கோ! எதையானும் மனசிலே தோன்றதையெல்லாம் சொல்லாதங்கோ. வாய் அழுகிப் போயிடும்'' என்றாள் குமுறலுடன். சொல்ல வேண்டாம் என்று தடுத்திருந்த வார்த்தைகள் வெளிப்பட்டே விட்டன. உண்மையில் அறியாமல் வந்துவிட்டன!

அவ்வளவுதான்! புயல் உக்கிரமாகவே வீச ஆரம்பித்து விட்டது. பிராணன் போன ஆத்மாவை ரேழியில் போட்டுக் கொண்டு படுத்தும் பாடு போல் ஆகி விட்டது வீடு.

'ரீடிங் ரூம் கிளப்'பிலிருந்து வந்த ராமநாதன் அம்மாவின் செய்கைகளைக் கண்டு பிரமித்துப் போய் ராஜத்தைப் பார்த்தான். ராஜம் இப்பொழுது உண்மையில் நடுங்கிக்கொண்டிருந்தாள். அவளது கண்களில் பிரவாகத்தைத் தேக்கம் போட்டு வைத்திருந்தது பயம். 'என்ன நடக்குமோ' என்ற எண்ணம் திகிலாக உருவெடுத்து நின்றது.

''என்ன அமர்க்களம் இதெல்லாம்?'' என்ற கேள்வியை ராமநாதன் கண்கள் ராஜத்தைப் பார்த்துக் கேட்டன.

ராஜம் தானாகவே, ''சாயங்காலம் நான் கோவிலுக்குப் போனேன்'' என்று ஆரம்பித்து ''எதற்கு இப்படியெல்லாம் பேசறேள் அவர் ஒன்றும் நினைக்காதபோதே என்று சொன்னேன். அதற்காக சாப்பிடாதே...'' என்று முடித்தாள்.

''அதுமட்டுமா சொன்னே நீ. வாய் அழுகிப் போயிடணும்னு சொல்லல்லே?'' என்றாள் செல்லம்மாள்.

ராஜம் தன் கணவனைப் பார்த்துக்கொண்டே, ''இல்லேன்னு-நான்தான் உங்களை அப்படியெல்லாம் நினைக்கறத்துக்குச் சொல்லிக் கொடுக்கிறேன், கொள்றேன்னு...''

ராமநாதன் அவள் வார்த்தையை முடிக்கவிடவில்லை. தடதட வென்று ராஜத்தைக் கைகளால் பற்றினான். ''இதுதானா உங்களுக்கு வீட்டிலே வேலை? ஒரு நாழிகை வீட்டிலில்லா

(19-ம் பக்கம்)




# ஸ்ரீ சியாமா சாஸ்திரிகளின் க்ருதிகள்

[காப்பிரைட்]

[ அரியக்குடி ஸ்ரீ டி. ராமானுஜய்யங்கார் ஸ்வரப்படுத்தியது. ]

1

பல்லவி

துருஸுகா, கிருபஜூசி, ஸந்தத, மரோக.
திருட, சரீர முக ஸலுபுநன்னு

அனுபல்லவி

பரம பாவனி, கிருபாவனி, வினுதபத ஸரோஜ;
ப்ரணதார்த்தி ஹருராணி பராகு
தர்ம ஸம்வர்த்தனி பஹு
பராகமலு குணத்ரிபுரஸுந்தரி,

சரணம்

நீ ஸந்நிதினி, ஜேரி கொலிசி நின்னெபுடு தலசே
ஸுஜன தாஸஜன பாக்யமெடு தெலுபுது நே,
ஓ, ஸகல பாபசமனீ! வினுமோங்காரி நியதி எடுலனு
நீ ஸாடி யெவரீ ஜகம்புலனு நேதானி தெலிஸி கொலிசிதினி ||

2. ஏமோ கலகஞ்ஜெந்தி மனமுனநே என்த்ஸட
கதி கானகனு, நீ மஹிமலெல்ல செவுலெனய வினி,
ஈமனஸுலோனி வெத தீர்த்ஸுட கீ வேளபஹு
நி புணவனி காமாக்ஷியு நீவு வேரெதனு காதனி தலசி கொலிசிதினி ||

3. தாராதர விநீல கசதா ஸரஸ கவிதாநிசித
ஸார கனஸார ஸிததரஹஸித வாரிருஹ வாரி
வத நோசித, வாகீசவினுத! ப்ருதநத! நாராயணி
ச்யாம கிருஷ்ணநுத! நாமனவிவினு கிரிஸுதா!

சிட்டைஸ்வரமும் ஸாஹித்தியமும்.

நிதா நி பதப—கரிநித மாகரி கரீ—ஸாரி நித ஸரி
ஸரோஜ நயன—நதஜன பாலினிவனீ—வேதமுலு—மொர
மபதா—நிபத—ஸரிஸ—மபம—தப—ஸநிதரிஸ—கரீ
லிடகா—னிதரு—லெவரு—மனவி வினி கிருபஸலுபு—பரா
ஸநித ரிஸா நிதபா கரிநி ||
குஸலு பரா திகநீ—விபுடு || (துரு)

II

| | |
|---|---|
| பரம பாவனி, க்ருபா அவனி | —பாபிகளைப் பரிசுத்தம் செய்வதில் ஒப்பற்றவளே, கருணையுடன் பக்தர்களை ரக்ஷிப்பவளே. |
| விநுதபத ஸரோஜ பிரணதார்த்திஹரராணி | —எல்லோரும் போற்றும் பாத கமலங்களையுடையவளே, போற்றினவர்களின் கஷ்டங்களைத் தீர்க்கும் சிவனுடைய ராணியே. பிரணதார்த்திஹரன் என்ற சிவனுடைய |
| தர்மஸம்வர்த்தனி | —அறம் வளர்க்கும் நாயகியே |
| அமல, குண | —குற்றமற்ற குணங்களால் நிறைந்தவளே. |
| த்ரிபுர ஸுந்தரி, பகுபாரகு | —என்னிடத்தில் உனக்கு எல்லையற்ற அலக்ஷியம் ஏற்பட்டது |
| துருஸுகா, க்ருபஜுசி | —சீக்கிரமாக என்னிடத்தில் கருணை காட்டி [ஆகையால் |
| ஸந்ததமு அரோகத்ருட சரீரமுக நன்னு ஸலுபு | —நோயற்ற திருடமான சரீரம் என்றைக்கும் உடையவனாக என் |
| 1. நீ, ஸந்நிதினி, ஜேரி, கொலிசி | —உன் ஸந்நிதியில் வந்து உன்னைப் போற்றி [னைச் செய். |
| நின்னு எபுடு தலசே | —உன்னை எப்பொழுதும் நினைக்கும் |
| ஸுஜன தாஸஜன பாக்கியமு | —நல்லோர்களும் பக்தர்களும் செய்த பாக்யம் இன்னதென்று எப்படித் தெரிவிப்பேன்? ஸகல பாபங்களையும் போக்குகிறவளே. |
| ஓ ஸகல பாபசமனி! ஓங்காரி! நீயதி எடுலனோ | —உன் ஆக்ஞை எப்படியோ! |
| நீ ஸாடிவெரு, ஈஜகம்புலனு மேதானி தெலிஸி கொலிசிதினி | —நான் அதையறிந்து உன்னைப் போற்றினேன். |
| 2. ஏமோ; கலகமு, ஜென்திமனமுன மேனு எத்ஸடகதி கானகனு | —ஏதோ மனதில் கலக்கமடைந்து நான் எங்கேயும் கதியைக் |
| நீ மஹிமமலு எல்லசெவுலுயைவினி | —உன் மஹிமை எல்லாம் சொல்வதைக் கேட்டு [காணமல் |
| ஈ மனஸுலோனி வெததீர்த்ஸுடகு | —என் மனதிலுள்ள கஷ்டத்தைத் தீர்ப்பதற்கு |
| ஈவேளபஹு, நிபுணவுஅனி | —இந்த ஸமயத்தில் நீயே ஸாமர்த்யமுள்ளவளென்று |
| காமாக்ஷியுநீவு | —காமாக்ஷி நீயே |
| வேறு தெனுகாது அனிதலசி கொலிசிதினி | —வேறு எவருமல்லவென்று எண்ணி உன்னையே போற்றி வந்தேன்; |
| 3. தாரா தரவிநீலகசலஸிதா | —மேகத்தைப்போல் கறுத்த தலைமயிருடன் விளங்குகிறவள் |
| ஸ்ரஸ கவிதா நிசித | —ரஸமுள்ள கவன சக்தியின் ரூபமே |
| ஸார கன ஸாரஸித தரஹஸிதா | —ஸாரமான கற்பூரம் சர்க்கரை முதலியவைகளைப்போல் மதுரமான புன்சிரிப்பையுடையவளே. |
| வாரிருஹவாரி, வதநோசித | —தாமரைப் புஷ்பத்தில் தங்கியிருக்கும் நீர்த்துளிகளைப் போன்ற ப்ரகாசமுள்ள முகத்தையுடையவளே. |
| வாகீ சவினுத, ப்ருதநத | —ப்ரஹ்மாவால் துதிக்கப்பட்டவளே உன்னால் காப்பாற்றப்பட்டவர்களால் துதிக்கப்பட்டவளே. |
| நாராயணி | —நாராயணனுடன் பிறந்தவளே! |
| ச்யாம கிருஷ்ண நுத | —கறுத்த கிருஷ்ணனால் போற்றப்பட்டவளே. |
| கிரிஸுதா, நாமனவி வினு | —பர்வதராஜன் பெண்ணே! என் வேண்டுகோளைக் கேள். |

சிட்டைஸ்வர ஸாஹித்யம்.

| | |
|---|---|
| ஸரோஜ நயன | —தாமரையை யொத்த நேத்ரங்களையுடையவளே. |
| நத ஜன பாலினி நீவு அனி | —உன்னை அண்டினவர்களைக் காப்பாற்றுகிறவள் நீயென்று |
| வேதமுலு மொரலிடகானு | —வேதங்கள் முறையிட |
| இதருலு எவரு | —மற்றவர்கள் யார். |
| மனவி, வினி, கிருப ஸலுபு | —என் ப்ரார்த்தனையைக் கேட்டு கிருபை செய். |
| பராகு ஸலு பராது, இக நீவு இபுடு | —நீ இப்பொழுது அலக்ஷ்யஞ் செய்யக்கூடாது. |

### சிட்டைஸ்வரம்

நி தா நி ப த ப க் | ரி நி த ம | ; க ரி || க ரீ ஸா ரி நி த |
ஸ ரி ம ப | தா ; || நி ப த ஸ ரி ஸ ம ப | ம த ப ஸ் | நி த
ரி ஸ் || க்ரீ ஸ் நி த ரி ஸ் | , நி த ப | , க்ரி நி || (துருஸு)

### சரணம்

பா, ம ப த ப தா ப த | நி த ப ம | க ரி த ப மா || கா ; , ரி
தா . ரா . . . . . த ர | வி நீ ல க | க ல ஸி . . || தா .
ஸ ரி | க ரி ஸ நி தா | ரி ஸ ரி க || ரீ, ம ப த பா த ம |
ஸ ர | ஸ க வி . தா | நி சி . த . || ஸா ர க ன ஸா . . |
க ரி ஸா | ஸ ரி ரி த ப ம || கா, ரி ஸா ரி க ரி ஸ நி த் | ஸ்ா ; |
ர ஸி த் | த ர ஹ . ஸி . || தா . . . . . . . . . . | . . |
; ; ||
. . ||
பா, த நி த ப ம பா த ம | . க ரி ஸ ரி | ம ப த த ||
வா . . ரி ரு ஹ வா . . | . ரி வ த | நோ சி த ||
பா த ப ம பா ப ரி ம | ப த ப ம | தா ; ||
வா . . . கே ச வி னு | த ப் ரு த ன | த ||
1. பா, த ஸ் ஸ்ா , ரி ஸ் | ஸ்ா ரி ஸ் | நி த ம த ||
நா . . ரா ய ணி | ச்யா ம க்ரு | , ஷ னு த ||
ரீ ஸ்ா ; ப ம | ப த ரி ஸ் நி த | பா த நி பா த ம ||
நா . ம ன் | வி னி வி . னு , | கி ரி . ஸு த . ||
2. ப த ஸ் ரி ப் ம் கா ரி ரி ஸ் | ரி க்ரீ ஸ்ா ஸ் நி | த த
நா . . . . . ரா . ய ணி | ச்யா . ம க் ரு . | . ஷ் ண
ம த || ரி ஸ்ா ; , ப ம | ப த ரி ஸ் நி த |
னு த || நா . ம ன | வி னி வி , னு . |
பா த நி பா த ம ||
கி ரி . ஸு த . || (துருஸுகா)

### சிட்டைஸ்வர ஸாஹித்யம் மட்டும் பாடவும்

நி தா நி ப த ப க் | ரி நி த ம | ; க ரி | க ரீ ஸா ரி
ஸ ரோ ஜ ந ய ன ந | த ஜ ன பா | . வி னி | வ னீ வே த
நி த | ஸ ரி ம ப | தா ; || நி ப த ஸ ரி ஸ ம ப | ம
மு னு | மொ ர லி ட | கா || னி த ரு லெ வ ரு ம ன | வி
த ப ஸ் | நி த ரி ஸ் || க்ரீ ஸ் நி த ரி ஸ் | , நி த ப | ;
வி னி க் ரு | ப ஸ னு பு || ப ரா கு ஸ னு ப ரா | , தி க நீ | .

க் ரி நி ||
வி பு டு || (துருஸுகா)

மற்ற சரணங்களும் இது போலவே.

# ராஜத்தின் மாமியார்

(14-ம் பக்கத் தொடர்ச்சி)

விட்டால் இந்த ரகளையா? அம்மாதான் எதையானும் சொன்னு நீ பொறுத்துக்கறதுக்கு என்ன கேடு!" என்று இரண்டு அடிகள் வழக்கத்திற்குப் புதுமையாய் கொடுத்துவிட்டான்.

ராஜம் விசும்பினுள். கண்கள் நீலம் பாய்ந்தன.

"ஏண்டாப்பா அவளைப் போட்டு அடிக்கறே நீ! பாவம், மூணுமாசமாய்ஸ்நானம்பண்ணுமலிருக்கிருள். எனக்காக பரிஞ்சுண்டு நீ அடிக்க வேண்டாம் அவளை" என்ருள் செல்லம்மாள்.

ராமநாதன் அடித்துவிட்டது என்னவோ உண்மை. அம்மாவுடைய வாய்த்துடுக்கு அவனுக்குத் தெரியும். இருந்தாலும் வழக்கை எப்படி கொண்டு போவது? அம்மாவைத் திருப்தி செய்ய வேண்டுமே! அதற்காகத்தான் அடித்தான். ராஜத்தை, 'அம்மாவுக்காகத்தான் அடிக்கறது போல் அடித்தேன்' என்று சொல்லி திருப்தி செய்வதா பிரமாதம்?

கோபத்தை மறைக்காமலேயே, "மூளை கெட்டது! எவ்வளவுதரம் சொன்னுலும் தெரிகிறதேயில்லை. காலில் விழுந்து நமஸ்காரம் பண்ணு அம்மாவுக்கு. இனிமே இப்படிச் செய்யல்லேன்னு சொல்லு போ" என்று அதட்டினுன்.

தயங்கினபடியே ராஜம் ஓர் அடி முன்னுல் எடுத்து வைத்தாள் நமஸ்காரம் செய்ய.

செல்லம்மாள் எழுந்திருந்து "எனக்கு நமஸ்காரம் செய்ய வேண்டாம். பிள்ளையை குட்டியைப் பெத்துக்கொண்டு சௌக்கியமா யிருந்தாப் போரும். ஆம்படையனுச்சு; பெண்டாட்டியாச்சு; சுகமா இருங்கோ; நான் ஒருத்தி இருக்கிறதனுலே தானே இந்த வம்பெல்லாம். நான் போறேன் காமாக்ஷியண்டே! எம் பொண்ணு எனக்கு ஒரு வேளை சோறு இல்லேங்காது" என்று அங்கலாய்ப்புடன் சொன்னுள்.

"அம்மா! அவளும் சிறிசு. நீதானே எல்லாம் அநுசரித்துக் கொண்டு போகணும்."

"நான் எதிலே சேந்தவ? ஏதாவது பேசினுத்தான் வாய் அழுகணும்கிருளே! வேண்டாம்—காலையிலே என்னை செத்தே தயவு பண்ணி ரயிலேத்தி விட்டுடு. உனக்குப் புண்ணிய முண்டு!"

ராமநாதனுக்கும் பெண் வீட்டிற்குப் போவதற்குத்தான் அம்மா இந்த ஆர்ப்பாட்டம் செய்கிருள் என்பது புலனுயிற்று. விட்டுப் பிடித்தால் தான் ஒழுங்குக்கு வரும் என்று நினைத்தான்.

"சரி; அப்படியே ஆகட்டும். நீ போய் ஏதானும் ஆகாரத்தைப் பண்ணு; போயேன்" என்று ஒருவாறு தீர்த்தான் ரகளையை.

ராஜம் அடி வாங்கின வருத்தத்தை சண்டை ஒருவிதமாய்த் தீர்ந்து போனதில் மறந்துபோக எண்ணிப் பெருமூச்சு விட்டாள். இரவு படுத்துக் கொண்டபோது அவளுக்கு அம்மாவின் இந்த அசூயை எப்படி வளர்ந்தது என்பது அர்த்தமாகவேயில்லை. முன்பெல்லாம் எவ்வளவு பிரியமாக இருந்தாள்!

ராஜத்துக்குச் சாந்தி கல்யாணமாகி வீட்டுக்கு வந்த புதிது. ராமநாதன் அவளுடன் பேசுவதேயில்லை. அம்மாவுக்கு எதிரில் அவளுடன் பேசவே லஜ்ஜையாய் இருக்கும். முதலில் ராஜம் அம்மாவுக்கு அருகிலேயே படுக்கையைப் போட்டுக் கொள்வாள். செல்லம்மாளும் இரண்டு மூன்று நாட்கள் ஒன்றும் சொல்லவில்லை. நான்காம் நாள், 'ராஜம்! உள்ளே போய் அவனுக்குப் படுக்கையெல்லாம் போட்டுவிட்டு ஏதாவது வேணுமா, என்று கேட்டு விட்டுவா' இனிமே நீதானே எல்லாம் கவனிச்சுக்கணும்!" என்ருள். ராஜம் எழுந்து உள்ளே செல்லும் வரையில் அவள் விடவில்லை.

ராமநாதன் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்ததுமே செல்லம்மாள் யார் வீட்டுக்காயினும் கிளம்ப ஆரம்பித்தாள். 'சிறிசுகள்—நான் இருந்தால் வெட்கப்படறதுகள். அவனுக்கு வேணுங்கறதை அவளைக் கேட்கட்டுமே! எப்படித்தான் அவளுக்கும் தெரியறது?"

ராஜத்துக்கு அம்மாவின் இந்த எண்ணங்கள் தெரியாமலில்லை. வீட்டுக்கு வேண்டிய ஜலம் அத்தனையும் செல்லம்மாளே போய் எடுத்துவந்தாள். சமையலறைக்கும் கூடத்துக்கும் வேலையிருக்கிறது மாதிரி ராஜம் போய் வந்துகொண்டிருந்தாள். ராமநாதனுக்கு உண்மையில் அம்மா கஷ்டப்படுவது ஆதங்கமாயிருந்தது. "ஏன் அம்மா! இவளை ஜலம் கொண்டு வரச் சொல்லறதுக்கென்ன? நீ என்னத்துக்கு இப்படியெல்லாம் பிராணனை விடறே?" என்ருன்.

செல்லம்மாள் சிரித்தாள். பிள்ளையின் இந்த வாத்சல்யம் அவளுக்குப் புளகாங்கிதமாயிருந்தது. "ராமு அவ சிறிசுதானே! இந்தக் குடத்தை அவளாலே எப்படித் தூக்க முடியும்! அவ ஜலம் கொண்டு வரப் போயிட்டா உனக்கு வேண்டியதை யார் கவனிக்கறது? நான் என்ன விழுப்பும் மடியுமா ஏதானும் கலந்துக்க முடியுமோ?" என்ருள்.

ராமநாதன் ராஜத்தோடு பேசாதபோதெல்லாம், ராஜத்தைக்கவனிக்காதபோதெல்லாம் அம்மாவுடைய பிரியம் குறையவேயில்லை. பின் எப்படி இந்த அசூயை தோன்றியது?

"அம்மா நீயே சமைக்கிறயே! ராஜத்தையும் சமைக்கச் சொல்லேன். அவளுக்கும் எப்பொதான் தெரியறது?"

இம்மாதிரிக் கேள்விகளில் தன் பிள்ளையின் அநுதாபம் பெண்டாட்டியின் மேலுள்ள

கரிசனத்தினுல்தான் உண்டாகிறது என்ற எண்ணம் இருப்பதாக அவள் ஊகித்துக் கொள்ள ஆரம்பித்தாள். ஊகமும் என்னவோ ஒரு விதத்தில் சரி; முழுதும் அல்ல!

"ஏன் உங்கிட்ட வந்து 'என்னை சமைக்கவே விடாமல் அம்மா அசடாயடிக்கிருள்' ன்னு ஏதாவது புகார் பண்ருளா?" இந்த விதத்தில் செல்லம்மாளின் கேள்விகள் தோன்ற ஆரம்பித்தன. புருஷனும் மனைவியும் உள்ளே போய் குசு குசு வெனப் பேசிக்கொள்ளும்போது கூட தன்னைப்பற்றி ஏதானும் புகார் நடக்குமோ?' என்ற அனாவசியமான சங்கை அவளுக்கு எழ ஆரம்பித்தது.

'எப்படித்தான் அம்மாவைத் திருப்தி செய்விப்பது?' என்ற கேள்வியே ராஜத்தை அயர்ந்த நித்திரை போகச் செய்தது.

* * * *

காலையில் செல்லம்மாள் ராஜம் படுக்கையைவிட்டு எழுந்து வருமுன்னமே ஸ்நானம் செய்து காப்பி போட்டு முடித்தாள். ஊருக்கு எடுத்துப் போக வேண்டியதெல்லாம் மூட்டை கட்டினுள். காமாக்ஷிக்கு அவரைக்காய் வத்தல் என்ருல் அலாதிப் பிரியம் என்ற ஞாபகம் வந்ததும் ஒரு தகர டப்பாவில் அதையும் எடுத்து வைத்துக்கொண்டாள். ராமநாதன் காப்பியைச் சாப்பிட உள்ளே வந்ததும், "அப்பா, இந்தப் பத்தரை மணி வண்டிக்கே போகணும். வண்டியை வரச் சொல்லிடு! என்னையும் ரயிலேத்தறத்துக்கு வந்துடு" என்ருள். எதிர் வீட்டில் ஊருக்குப் போவதைப் போய் தெரிவித்துவிட்டு வந்தாள். இத்தனைக்கும் ராஜத்தோடு ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ராஜமும் எவ்வளவோ பேச முயற்சி செய்தும், 'என்ன பேசுவது? எப்படி பேசுவது? என்பதே புரியாமல் இருந்துவிட்டாள்.

ஒன்பது மணிக்கெல்லாம், 'போஸ்ட்' என்று தபாற்காரன் சப்தம் கொடுத்தான். ராஜம் கிடுகிடெனப் போய் கடிதத்தை வாங்கி வந்தாள். வரும் போதே, 'காமாக்ஷி அக்கா விடமிருந்து தபால் வந்திருக்கு அம்மா! என்று கடிதத்தை செல்லம்மாளிடம் கொடுத்தாள்.

செல்லம்மாள் பரபரப்புடன் அதைப் பிரித்தாள். அவளுக்குச் சரியாகப் படிக்கத் தெரியாது. வெள்ளெழுத்து வேறு!! எப்படி, அதை படிக்கச் சொல்வது? ராஜத்துடன்தான் பேசவில்லையே! அடுத்த வீட்டு மணி வாசலில் குத்துப் பம்பரம் விட்டுக்கொண்டிருந்தான் "குழந்தை! கொஞ்சம் இங்கே வந்து இதைப் படிச்சுக் காண்பியேன்" என்று வெகு பிரயாசையுடன் அழைத்துவந்தாள். அவன் தப்பும் தவறுமாய், நான் நாளை கார்த்த வண்டிக்குப் புறப்பட்டு வர்றேன். இப்படிக்கு காமாச்சி' என்று தட்டுத் தடுமாறி வாசித்து ஓடிவிட்டான் பம்பரக் கயிற்றுடன். செல்லம்மாளின் துடிப்பு சொல்லமுடியாத விதமாய் இருந்தது. தம் பெண் முக்கியமானதென்று எழுதியிருக்கிறதை அவனுக்கு படிக்கத் தெரிந்திருக்காது; என்னமோ உளறுகிருன் என்று சங்கடம் உண்டாயிற்று.

வெட்கம் மீறிச் சென்றது; தயக்கம் பறந்து விட்டது;

"ராஜம், இங்கே வாம்மா என்ன எழுதியிருக்கா உன் நாத்தனார், சித்தெவாசி!" என்ருள்.

'நாளைக்குக் காலையிலே அங்கே புறப்பட்டு வருகிறேன். மன்னி, அண்ணு எல்லோரோடேயும் கொஞ்ச நாள் இருக்கணும் போலேருக்கு' என்று எழுதியிருந்ததை வாசித்துச் சொன்னுள் ராஜம்.

"என்னிக்கு? நாளைக் கார்த்தாலே வண்டிக்கின்னு எழுதிருக்காள்?"

"ஆமாம்."

"சரி; அவன் வர்ற நேரமாச்சு! ஸ்நானத்தைப் பண்ணு போ. நான்தான் ரயிலுக்குப் போகலேயே! சமைக்க ஆரம்பி, பதினொரு மணி வரையிலும் சாப்பிடாம உடம்பைக்கெடுத்துக்காதே போ" என்ருள் வாஞ்சையுடன்.

ராஜம்முகமலர்ச்சியுடன் தலையசைத்து உள்ளே போனுள். மாமியாரின் சுமுகம் அவளை உத்சாகப்படுத்தியது.

இலக்கியம்

# கல்லா இளமை



(ஜே. பார்த்தசாரதி, எம். ஏ.)

பரந்த இந்நிலவுலகின் கண் தோன்றும் அழகெல்லாம் தேய்ந்து குன்றுவது நாம் கண்கூடாகக் காணும் உண்மைகளில் ஒன்று. சுந்தர நங்கையர், நாட்கள் தேயத்தேய குரூபிகளாக மாறுகின்றனர்; எழில் பெற்ற சோலைகள், பூங்காக்கள் போன்ற இயற்கைக் காட்சிகள் அழிந்து, வனப்பை இழக்கும் நாட்களும் உண்டு. இம்முறையிலே நம் இளமையின் தூய மனப்பண்பும், இயற்கை யழகுகளிலே மெய்மறந்து திளைக்கும் தன்மையும் ஒவ்வொரு நாடியிலும் உயிர் ததும்பும் உடல்வலியும், நாட்கள் மாதங்களாகி, மாதங்கள் ஆண்டுகளாகிச் செல்ல மெல்ல மெல்ல மறைகின்றன. உலகத்தின் கபட நாடகத்திலே, நம் மனம் ஈடுபட்டு இயற்கையின் மீது சலிப்பும் ஏற்படுகிறது.

இளமையில் தான் பரம்பொருளின் நிழலிலே நாம் வாழ்கிறோம். கடவுளின் இருப்பிடம்தான் நமக்குரிய வீடு; அவர் முன்னிலையை விட்டு நாம் உலகிற் பிறந்தாலும் இளமையிலே கடவுள் தன்மை நம்மைவிட்டு நீங்கவில்லை. குழந்தை வளர வளர அதனை உலகச் சிறைச்சாலை விழுங்கி விடுகிறது, என்று ஆங்கிலக் கவிஞர் 'வர்ட்ஸ்வொர்த்' பாடியுள்ளார். இளமையின் கனவுகள், லட்சியங்கள், செயல்கள், யாவும் வானினும் கடலினும் பெரியவை; உலகவாழ்வின் குறுகிய வரம்புகளுக்குட்பட்டு, இளமை இடர்ப்படுவதில்லை. காளைப் பருவம் ஒரு மனிதன் வாழ்க்கையிலே மறக்கொணாதது; உடல்வலுவினாலே, உலகத்தையும் எதிர்க்கக்கூடிய காலம் அதுவன்றோ!

இளமையின் கழிவை நினைந்து வருந்தாத புலவரில்லை. தமிழ் நாட்டுப் புலவரொருவர் இளமை தேய்ந்ததற்குப் பெரிதும் இரங்குகிறார்; செஞ்சொற் கவியில் இளமையின் செருக்கையும் முதுமையின் பரிதாபத்தையும் சித்திரிக்கிறார்.

ஓர் குளக்கரை. அக்கரையிலே, மருத மரமொன்று, வானுறவோங்கியும், மடுநீரைத் தொடுமளவும் தாழ்ந்தும் நிற்கிறது. அருகிலுள்ள மணற்குன்றுகளில் பெண்கள் மண்பாவை (பொம்மை)களைச் செய்து, அவைகளுக்கு அணிவிக்கப் பூக்களையும் கொய்து வைத்திருக்கின்றனர். யௌவன புருஷனொருவன் அம்மகளிரிடையே தோன்றுகிறான்; அவர்கள் கொய்துள்ள பூக்களைத் தலையிலே சூடுகிறான். குளிர்ச்சி மிகுந்த தண்ணீரிலே, மகளிருடன் அசையும் பொழுது அசைந்து, விளையாடி இளமை யமிழ்தத்தை நுகருகிறான். ஒன்றையும் மறைத்தல் அறியாத வஞ்சனையற்ற, பெண்டிருடன் மருத மரத்தின் கொம்பில் ஏறி, ஆழமான மடுவிலே, 'துடு'மெனப் பாய்கிறான். நீரைத் துழாவி, மண்ணை முகந்து, மேலே கொணர்கிறான். குளத்தின் அலைகள் சிதறித் தெறிக்கின்றன; கரையில் நிற்போர் இக்காளையின் ஆற்றலைக் கண்டு மருளுகின்றனர்.

வாழ்வின் புயலிலே அடிபட்டுத் தழும்பேறாத இக் 'கல்லா இளமை' கழியுங்காலம் வருகிறது; புலவர் பூண் பிடித்த கழியை ஊன்றி, தள்ளாடி நடக்கும் பெருமூதாளராக மாறுகிறார். தொடர்ந்து பேசச் சக்தியில்லை. பலத்த இருமலிடையே சில சொற்கள் தான் வாயினின்றும் வெளிப்படுகின்றன. இளமை எங்கே? முதுமை எங்கே? தன் விருத்தாப்பிய நிலையிலே, "சென்று போன அந்நாட்கள் திரும்புமோ? அவை யாண்டுண்டு கொல்லோ?" எனப் புலவர் ஏங்குகிறார்.

இனி நினைந் திரக்க
மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக்
கொய்பூத்தைஇத்
தண்கய மாடு
மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத்
தூங்குவழித் தூங்கி
மறையென லறியா
மாயமி லாயமொ
டுயர்சினை மருதத்
துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ
டேறிச் சீர் மிகக்
கரையவர் மருளத்
திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத்
துடுமெனப் பாய்ந்து
குளித்துமணற் கொண்ட
கல்லா இளமை
அளிதோ தானே
யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண்
டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த
சிலசொற்
பெருமூதாளரே
மாகிய எமக்கே.

(புறநானூறு, 242)

[இரக்கமாகின்று: இரக்கம் உண்டாகிறது. திணிமணல்: செறிந்த மணல். செய்வுறு பாவை: செய்யப்படும் விளையாட்டு பொம்மை. தைஇ: சூடி. தண்கயம்: குளிர்ச்சியுள்ள குளம். தூங்கு வழி: அசையும்

(அடுத்த பக்கம்)

# ஆத்தூர் முத்து



வ. ரா.

ஆத்தூர் முத்து என்பது சுருக்கமான, செல்லப் பெயர். அவருடைய தீர்க்கமான விலாசத்தைக் கேட்டால், ஒருக்கால், நீங்கள் மூர்ச்சை போட்டு விழுந்தாலும் விழுந்து விடலாம். மூர்ச்சையாவது போடவாவது என்று நீங்கள் ஆக்ஷேபித்தால், முழு விலாசத்தையும் சொல்லத் தயார், காகித பஞ்ச காலமாயிருந்த போதிலும்.

பேராத்தூர், நூறு கன்னிகாதான, அஷ்டாவதான முத்துஸ்வாமி தீக்ஷிதர் என்பது அவரது முழுப் பெயர். பேராத்தூர், தீக்ஷிதர் பிறந்த ஊர். நூறு கன்னிகாதான என்பது அவரது குடும்பத்தின் பட்டப் பெயர். அஷ்டாவதான என்பது அவருக்கு சொந்தத்தில் கிடைத்த புகழ் பட்டம்.

கோடி கன்னிகாதானம் என்பதுதான் நாம் பரம்பரையாக கேட்டு வரும் பட்டம். நூறு கன்னிகாதானம் கேள்விப்பட்டதேயில்லை. நூறு அசுவமேத யாகம் போல, இதுவும் ஒன்றாக இருக்கலாம். ரிஷி மூலம், நதி மூலம், இவைகளை விசாரிக்கலாகாது என்று பெரியார்கள் சொல்லுவார்கள்; எனவே, நூறு கன்னிகாதானத்தின் மூலத்தை, நாம் ஏன் விசாரிக்க வேண்டும்?

தீக்ஷிதர் என்றாலே நல்ல வைதிகக் குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லவும் வேண்டுமா? பேராத்தூர் நூறு......தீக்ஷிதர், எப்படி ஆத்தூர் முத்து ஆனார் என்று கேட்பது பொருத்தமுள்ளதாகும். கழுதை தேய்ந்து, கட்டெறும்பு ஆன கதைபோலிருக்கிறது என்று விஷயம் தெரிந்தது போல கூக்குரல் இடுவதும் தவறாகும்.

தீக்ஷிதரின் பெரியார்கள் காணி நிலத்தைக் கொண்டு, தலைமுறை தலைமுறையாகக் கரையேறினவர்கள். காணி நிலத்தை 'அழியாமல் கொள்ளாமல்' தலைமுறை தலைமுறையாக, அந்தக் குடும்பத்தார் எவ்வாறு காப்பாற்றி வந்தார்கள் என்பதற்குக் காரணம் தெரியாது. பழைய காலத்தில், இந்த மாதிரி அற்புதத்தை, எத்தனையோ குடும்பங்கள் செய்திருக்கின்றன என்பது மட்டும் குறிப்பிடத்தக்கது.

ஆத்தூர் முத்து பிறந்ததும் குடும்பத்தின் காணி நிலம் மாயமாய்ப் பறந்து போய்விட்டது. எனவே, அவரது தகப்பனார் முத்துவை, 'துடைகாலி' 'துக்கிரி' 'பக்கிரி' என்று பல வாறாக அழைக்க ஆரம்பித்து விட்டார். தாயாருக்கோ முத்து ஏழாவது குழந்தை. எனவே, பெற்றோர்களின் பேராதரவு இல்லாமல் வளர்ந்த குழந்தை முத்து.

சம்பிரதாயப்படி, முத்துவை, ஐந்து வயதில் வாசிக்க வைத்தார்கள். வயது வளர்ந்துகொண்டே போயிற்று; ஆனால் வாசிப்பு, இருந்த இடத்திலேயே இருந்தது. குழந்தை என்று சிறிதுகாலம்தான், பெற்றோர்கள் பார்த்தார்கள். பிறகு இடித்த புளிமாதிரி, ஏன் உட்கார்ந்திருக்கிறாய் என்று தாய் கேட்பாள். மரக்குதிர் வயிறுக்கு யார் சோறு போட முடியும் என்பார் தகப்பனார்.

எதற்கும் அசையாமல் முத்து மைல் கல்லைப்போல இருந்தார். காலத்தில் முத்துவுக்கு பூநூல் போட்டார்கள். முத்து இதை பொறுத்துக் கொண்டிருந்தார் என்றுதான் சொல்லவேண்டும்.

பேராத்தூரில், பைத்தியம் பிடித்தவரைப் போல, முத்து வாழ்ந்து வந்தார். பிழைப்புக்கோ வழியில்லை; பெற்றோர்களின் கோபத்துக்கோ எல்லை இல்லை; உற்றார்களின் அவமதிப்புக்கும் குறைவொன்றுமில்லை. நாள் போவது, யுகம் போவது மாதிரி இருந்தது.

பள்ளியை மிதிக்காத முத்துவுக்கு, இரண்டொரு பாக்கியங்கள் மட்டும் இருந்தன. கவர்ச்சி பொருந்திய குரலும், மலர்ச்சி பொருந்திய முகமும், கலகலப்பான பேச்சும், அந்த பாக்கியங்கள். இவைகள் கூட, அக்கிரகாரத்தில் செல்லவில்லை. 'இந்த பிள்ளையை பெற்றதற்குப் பதிலாக, ஒரு கூடை பெரண்டையை வைத்துக் கட்டிக்கலாம் காமு' என்று கிழவிகள் சுரம் போட்டுச் சொல்லுவார்கள்.

தன்னை மதிக்காத அக்கிரகாரத்தில் முத்து இருப்பதில்லை. அவருக்கு குடியானத் தெருவில்தான் வாசம். சாப்பாட்டு நேரம் போக, பாக்கி காலமெல்லாம், முத்துவை குடியானத்

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

பொழுது. மறை: இரகசியம் ஆயம்: விளையாடும் மகளிர் கூட்டம். சினை: கிளை; துறையுற: துறையிற் படிய நீர்நணிப்படி கோடு: நீரை அடைந்து படிந்த கொப்பு; திரையகம்: அலையின் உட்புறம்; குட்டம்: குளம் அளிது: இரங்கத்தக்கது. தொடித்தலை: பூணுடைய தலை; இருமிடை மிடைந்த இருமவிடையே கோக்கப்பட்ட.]

பொருளழகும் சொல் நயமும் வாய்ந்த இப்பாட்டு சாதாரண இளமையனுபவமொன்றை உயிரோவியமாக்கி விட்டது. இயற்கை வரம்பு கடவாத வருணனையும், தமிழ்ப் பண்பு நிறைந்த சொற்களும், அச்சொற்களின் மீது நடந்து உலாவும் இரக்கக் குறிப்பும், இக்கவியைச் சுவைக்குந்தோறும் புது இன்பத்தை அளிக்கிறது.

தெருவில், பூக்கார கந்தசாமி வீட்டிலே காணலாம்.

பூக்காரர், நன்ருகப் பாடுவார். அநேகமாக, நாடகப் பாட்டுகள்தான். நாடகப் பாட்டுப் பாடுகிறவன் வீட்டிலே, முத்து, குடியாகக் கிடக்கிருன் என்று அவர் பேரில் அடுத்த குற்றச்சாட்டு. ஜாதி கெட்டவன் என்று வாழ்த்து. முத்து, பாவம்! என்ன செய்வார்?

அக்கிரகாரத்திலே கௌரவம் இல்லை; குடியானத் தெருவுக்குப் போனுல் கோபம். ஆனுல் முத்து இதை லக்ஷியம் செய்யவில்லை. பூக்கார கந்தசாமிக்குத் தெரிந்த பாட்டுகளை எப்படியாவது கற்றுக்கொள்ள வேண்டும் என்று முத்து தீர்மானங்கொண்டார். 'முத்தய்யா! நீங்க அற்புதமா பாடிறீங்க. நீங்க ஏன் சினிமாவிலே சேரப்படாது' என்ருர் பூக்காரர்.

'யாரு எனக்கு பாக்கு வச்சு அழைக்கிரு' என்று முத்து சிரித்துக்கொண்டு சொல்லுவார். இருந்தாலும், பூக்காரர் சொன்ன யோசனை முத்துவின் மனதில் ரொம்ப ஆழமாகப் பதிந்துவிட்டது. அந்தத் தீர்மானத்துக்குப் பிறகு, முத்து, அர்த்த க்ஷவரம் செய்துகொள்ளுவதை நிறுத்திவிட்டார். தலைமுழுதையும் வளர்த்தார். யாராவது கேட்டால், வெங்கடாசலபதிக்கு பிரார்த்தனை என்பார். 'உன்னுடைய முடிதானு, அந்த திருவேங்கடமுடையானுக்கு வேண்டும்' என்று கிழவர் ஒருவர், வாய்த்துடுக்காக கேட்பார்.

'முடிவசூல் செய்கிற பெருமாளிடம் கேட்டு, உங்கள் சந்தேகத்தை தெளிந்து கொள்ளுங்கள்' என்று முத்துவும் வாய்துடுக்காகவே பதில் சொல்லுவார்.

முடிவைத்துக்கொண்ட முத்து, தனது முகவிலாசத்தை, கண்ணுடியில் பார்ப்பதில் அலுத்துப் போவதே இல்லை. 'எம் பெருமான் அழகுக்கு, என் அழகு நேராகுமோ' என்று அழகு பார்த்த ஆண்டாளைப் போல, முத்து, கண்ணுடியில் தனது முகத்தைப் பார்த்து, 'சினிமாவில், இந்த முகம் எடுபடுமோ' என்று மனம் ஏங்குவதைப்போல, தனக்குள்ளாகவே, சொல்லிக்கொள்ளுவார்.

முழுமுடிக்கும் சினிமாவுக்கும் சூக்ஷ்மமான சம்பந்தம் எனக்குத்தெரியாது. முத்துவுக்கும் ஊரார்க்கும் தான் தெரியும். முத்து முழுமுடி வளர்க்கத்துவக்கியதும், அவர் முக க்ஷவரம் செய்துகொண்டார். நாலு காசை கையாலே சம்பாதிக்க யோக்கியதை இல்லாத இந்த அடிமுட்டாளுக்கு, முக க்ஷவரம் வேறு வேண்டியிருக்கிறது என்று அக்கிரகாரத்தில் பேசிக்கொண்டார்கள்.

'ஒட்டகை முதுகின் பேரில் கடைசி துரும்பு' என்று சொல்லுவதுண்டு. தாங்கும் சுமைக்கு எல்லையை இதன் மூலமாகக் குறிப்பிடுகிருர்களாம்! கையிலே, கால் காசுமில்லாத பக்கிப் பையன் முகக்ஷவரம் செய்துகொண்டு, பரம்பரை தீக்ஷிதர் குடும்பத்தின் பெயரை, நடுச் சந்திக்கு கொண்டு வரவாவது என்று பெற்ருேர்கள் மனம் பொங்கிப் போனுர்கள்.

'மனப் பொங்கலுக்கு' அடையாளமாக, ருசுவாக, பெற்ருேர்கள் செய்தது என்ன? 'வீட்டிலே அந்தப் பயலுக்கு, இனிமேல் பிண்டம் போடாதே' என்று தகப்பனர் தாயாருக்கு தாக்கீது செய்து விட்டார். எனவே, முத்துவுக்கு சோற்றுக்கு 'லாட்டரி'. வீட்டை விட்டு வெளியேறினுர். அரை வேஷ்டி, ஜூப்பா, துண்டு, முழுமுடி சகிதமாக, முத்து, உலகப் பிரயாணத்துக்கு ஆயத்தமானுர்.

பூக்கார கந்தசாமிக்கு மட்டும், முத்துவினிடம் அளவில்லாத நம்பிக்கை. என்றைக்கிருந்தாலும் முத்து, சினிமா நக்ஷத்திரமாவார் என்பதில், கந்தசாமிக்கு சந்தேகமே எழுந்ததில்லை. கந்தசாமிக்கு அதிருஷ்டத்தில் நம்பிக்கை இல்லை. முத்துவின் முகவிலாசத்திலும் குரலிலும் அவருக்குப் பூரணமான நம்பிக்கை.

சினிமாப் படத்தில் எழுதிக் காண்பிப்பதைப் போல, 'இவ்வாறு இரண்டு வருஷங்கள் சென்றன.' முத்து பழைய ஜூப்பா தலைமுடி முத்துவாகவே தான் விளங்கினுர். எப்படியோ வயிறு வளர்த்து வந்தார். அதன் ரகசியத்தை அவரைக் கேட்டுத் தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

சித்திரை மாதம், வளர்பிறை: ஒரு நாள் இரவு. நிலவு பட்டப்பகலைப் போல காய்கிறது. ஆற்று மணலில், முத்து அனுயாசமாகப் பாடிக்கொண்டிருந்தார். இவரைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள் இருவர்.

முத்து இருக்குமிடம் தேடி, மறு நாள் ஒரு ஆள் வந்தான். ஆளோடு வந்தது 'அதிருஷ்டமும்'. அழைத்தது சினிமா முதலாளி. அன்று முதல், நாளிது வரையில் முத்து மங்காப் புகழோடு விளங்குகிருர்.

இப்பொழுது அவர் பெரிய 'நக்ஷத்திரம்'; இன்னும் 'கிரகம்' ஆகவில்லை. இருந்தாலும் சொந்த ஊரில், பெரிய கிரகம் கட்டி, பிரவேசமும் செய்துவிட்டார். சுற்றுக்கு ஐம்பது மைல் தூரத்திலுள்ள பார்ப்பனர்கள் எல்லாரும், முத்து தங்கள் உறவு என்று சொல்லி பெருமை அடித்துக்கொள்ளுகிருர்கள். ஆனுல் முத்து பிராமணரல்லாத பெண்ணை மணந்தது அவர்களுக்குத் தெரியாதா?

தெரியும். அதனுல் என்ன? லக்ஷ்மிகடாக்ஷம் இருக்கும் முத்துவிடம் முகத்தைக் காண்பிக்கலாமோ என்கிருர்கள். சரியான சமாதானம்தானு, இல்லையா என்று தீர்ப்பு சொல்ல வேண்டியது உங்கள் கடமை.

———

# :: சிறுவர்கள் செய்ய வேண்டிய வேலை ::



## பால்கன் - ஜி - பாரி
(அ. இ. குழந்தைகள் சங்கம்)



[அகில பாரத பாலர் சங்கத்தின் ஆதரவில் நடத்தப் படுவது.]

அன்பார்ந்த சகோதர சகோதரிகளே!

பனை, மா, இவற்றுள் எதற்கு அழகு அதிகம்? பனை மரத்திற்கு கொம்புமில்லை; பூவுமில்லை; அழகான காயுமில்லை; மாவானது பெரிய கிளைகளையும் சிவந்த தளிர்களையும் மஞ்சள் நிறப் பூக்களையும் பச்சை நிறக் காய்களையும் தாங்கி, அழகுடன் விளங்குகிறது. கண்ணிற்கு குளிர்ச்சியையும் மனதிற்கு மகிழ்ச்சியையும் கொடுக்கிறது.

இந்த மா மரத்தைப் போலிருக்க வேண்டும் நமது சங்கமும். அதற்கு சாகைகளும் உபசாகைகளும் எல்லா ஊர்களிலும் கிளம்ப வேண்டும். அவ்விதம் கிளம்பினால் அங்கு கூடிக் களிக்கும் பிள்ளைகளும் பெண்களும் மாவின் தளிர்களையும் பூக்களையும் போன்றிருப்பார்கள். அவர்களால் சங்கம் பேரும் புகழும் அடையும்.

கிளை ஸ்தாபனங்களைப் பற்றி இனி கூறுகிறேன். உங்கள் ஊரில் குறைந்தது 10 அங்கத்தினர் இருந்தால் அங்கே "பாரி"யின் ஒரு வகுப்பை (Group)த் தொடங்கலாம். குறைந்தது 20 பேர் இருந்தால் ஒரு கிளையை (Branch) ஸ்தாபிக்கலாம். தலைவராக ஒரு பெரியாரையாவது அல்லது ஒரு பெண்மணியையாவது தேர்ந்து எடுத்துக் கொள்ளுங்கள். உங்களிலேயே ஒருவரை காரியதரிசியாக நியமித்துக் கொள்ளலாம். வேண்டியிருந்தால் ஐந்தாறு பேர் கொண்ட ஒரு காரியக்கமிட்டியையும் ஏற்படுத்துங்கள். இவ்வளவும் ஆன பிறகு சங்கத்தின் லட்சியங்களை முன் நிறுத்தி வேலை செய்யத் தொடங்கலாம்.

என்ன வென்ன காரியங்கள் செய்யலாம் என்றால் சிறுவருக்கு இஷ்டமானவையெல்லாவற்றையும் தான் செய்யலாம். எனக்குத் தோன்றிய சிலவற்றை இங்கே சொல்லுகிறேன். ஒவ்வொரு நாளும் மாலை வேளையில் கூடி, ஓடி விளையாட வேண்டும். ஊரிலுள்ள மற்ற குழந்தைகளையும் உங்கள் ஆட்டங்களில் சேர்த்துக் கொள்ளுதல் மிகவும் அவசியம். புதிய புதிய வேடிக்கையான விளையாட்டுகளை அவர்களுக்குச் சொல்லித் தரவேண்டும். பின்பு, வாரம் ஒரு முறை அல்லது இருமுறை தலைவரின் கீழ் கூட வேண்டும். அக்கூட்டங்களில், பொது விஷயங்களைக் குறித்து சர்ச்சை செய்தல், கதைகள் சொல்லுதல், அருமையான பாடல்கள், செய்யுட்கள் முதலியன பாராமல் ஒப்புவித்தல், நடனமாடுதல் இவைபோன்ற காரியங்களைச் செய்யலாம். அடிக்கடி எல்லோரும் சேர்ந்து சேரிகள், சரித்திர சம்பந்தமான இடங்கள், புண்ணிய ஸ்தலங்கள், இன்னும் பலவிதத்தில் முக்கியமான இடங்களுக்கு யாத்திரை போக வேண்டும். நம் நாட்டுப் பெரியோர்களின் பிறந்த நாட்கள் வரும் பொழுது அவற்றைத் திருநாட்களாகக் கொண்டாடி ஊரில் தேசீய உணர்ச்சியை வளர்க்க வேண்டும். இந்த மாதிரி அநேக காரியங்கள் நீங்கள் செய்யலாம்.

என்ன செய்வதானாலும் பெற்றோர்களையும் "தாதா"வையும் கலந்தாலோசித்துச் செய்யுங்கள். "விளையாட்டின் மூலம் கல்வி" என்ற நமது லட்சியத்தையும் மறந்துவிடக்கூடாது.

சிறுவராலோ சிறுவருக்காகவோ எழுதப்படும் சிறு பாட்டுகள், புதிர்கள், வேடிக்கைகள், விகடத் துணுக்குகள், புதிய விளையாட்டுகள், முதலியவை இப்பகுதியில் பிரசுரிக்கப்படும். அத்தகைய விஷயங்களை எழுதி கீழே தரும் விலாசத்திற்கு அனுப்பவும்.

சகோதரன் ஹரி.

ஹரி,
"ஷாலிமர்,"
தைக்காடு,
திருவனந்தபுரம்

## எல்லாம் விதிவசம்!

(8-ம் பக்க தொடர்ச்சி)

ஒரு தட்டில் ஏதோ கொஞ்சம் பக்ஷணங்களும் இரண்டு டம்ளரில் காப்பியையும் கொண்டு வந்து என் பக்கத்தில் வைத்தாள். அவள் முகத்தை உற்று நோக்கினேன் நான். எங்கள் கண்கள் ஒன்றையொன்று சந்தித்தன. வெட்கத்தினால் அவள் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டு திரும்பி உள்ளே சென்று விட்டாள். "உம். எடுத்துக்கோ" என்று உபசாரம் செய்தார் கோபாலய்யர். ஒருவழியாக அந்த பக்ஷணங்களைக் காலி செய்துவிட்டு, காப்பியையும் குடித்துவிட்டு சற்று நேரத்திற்கெல்லாம் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு ரூமுக்குக் கிளம்பினேன். "நாளைக்கு மறக்காமல் ஜாதகம் கொண்டுவா" என்று ஞாபகப் படுத்தினார் அவர். "கட்டாயம் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு சிரித்த முகத்துடன் வெளிக்கிளம்பினேன்.

என் கால்கள் சென்ற வழியே நானும் நடந்தேன். ஆனால் என் கண்ணெதிரே தோன்றியதெல்லாம் அவள் உருவம் ஒன்றுதான். ரூமுக்குப் போன உடனேயே முதல் வேலையாக என்னுடைய ஜாதகத்தை எடுத்து என் பையில் வைத்துக் கொண்டேன்.

* * * *

மறுநாட் காலை வழக்கத்திற்கு சற்று முன்னமாகவே ஆபீஸிற்குக் கிளம்பினேன். பல தடவைகளும் ஜாதகம் இருக்கிறதா என்று பையை தொட்டுப் பார்த்துக் கொண்டே நடக்கலானேன்.

"என்னப்பா ரொம்ப சீக்கிரமா இருக்கே. இன்று என்ன விசேஷம்?" என்று கேட்டுக் கொண்டே பக்கத்திலிருந்த ஒரு சந்திலிருந்து வெளிவந்தார் எங்கள் ஆபீஸ் 'டைப்பிஸ்டு' ராஜாமணி அய்யர். நான் என்ன பதில் சொல்லுகிறேன் என்பதைக் கூட எதிர்பாராமல் சட்டென்று அவர் வேறு பக்கம் திரும்பி "என்னடீ, மீனு எங்கே போய் விட்டுவரே? கையிலே என்னடீ, மருந்தா?" என்று யாரையோபார்த்துக்கேட்டார். அவர் யாருடன் பேசுகிறார் என்று நானும் அவர் கண்கள் சென்ற திக்கை நோக்கினேன். என் கண்ணெதிரே தென்பட்டது ஓர் பெண்ணுருவம். "அப்பா! அவள் கழுத்தில் தான் எத்தனை சங்கிலிகள் வடம் வடமாகத் தொங்கின! கையில் எத்தனை வளையல்கள், காலில் பட்டைக் கொலுசு, உடலில் ஜார்ஜெட் புடவை. பாவம் இவ்வளவும் இருந்தென்ன? இயற்கையில்தான் அழகில்லாமல் இருந்தால் செயற்கை அழகும் கூடவா பலிக்காமற் போகவேண்டும்? யாரிட்டசாபமோ?" என்று என் மனத்தினுள் நினைத்துக்கொண்டேன்.

"சித்திக்கு இரண்டு நாளாக இருமல். அதற்காக மருந்து வாங்கிக்கொண்டு போகிறேன்" என்று சொல்லிக்கொண்டே மேலே நடந்தாள் அப்பெண்.

"சரி போ" என்று சொல்லிவிட்டு ராஜாமணி என் பக்கம் திரும்பி "இதுதானப்பா உன் சினேகிதர் கோபாலய்யரின் செல்லப்பெண்" என்றார்.

"இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் எனக்கு தூக்கி வாரிப்போட்டது." என்ன, இது அவருடைய பெண்ணா? அவருக்கு ஒரே பெண்தானே உண்டு. அப்படியானால் அவர் வீட்டில் இன்னொரு பெண் இருக்கிறாளே? அவள் யார்? என்று படபடப்புடன் வார்த்தைகள் என் வாயிலிருந்து கிளம்பின.

"இதுதான் அவருடைய பெண். அது அவருடைய பெண் அல்லவே. அது அவருடைய மனைவின்னா! அவளை உனக்கெப்படித் தெரியும்?" என்று சொல்லிக் கொண்டே என் தோள்களைப் பிடித்துக் குலுக்கினார் ராஜாமணி.

"அது எப்படித் தெரியும்... நிஜமாகவே அது அவருடைய மனைவியா" என்று திரும்பவும் கேட்டேன்.

"ஆமாமப்பா, ஆமாம். எவனோ பணத்துக்கு ஆசைப்பட்டு கிளிபோல பெண்ணை வளர்த்து இந்தப் பூனையின்கையில் கொடுத்துவிட்டான் பாவி. இவனுக்குத்தான் கொஞ்சமாவது புத்தி இருந்தா நாற்பத்து இரண்டு வயசிலே இந்தமாதிரி கல்யாணம் செய்துகொள்வானா? எல்லாம் பணம் செய்யர வேலையப்பா" என்று ராஜாமணி கூறும் போது என் தலை சுழன்றது. யாரோ என் ஹிருதயத்தில் கல்லைத் தூக்கிப் போட்டமாதிரி இருந்தது. "அவள்? அவள்.... அவனுடைய மனைவியா? அடபாவி. நீயும் ஒருமனிதனா" என்று என் மனம் அந்தப்பாவி



அண்ணுமலே சர்வகலா சாலேக்குத் தொழிற் கல்விப் போதனேக்காக உபயோகிக்கும்படி ஸ்ரீமான் ஆர். எம். அழகப்ப செட்டியார் ரூ 5 லட்சம் நன்கொடை அளித்திருக்கிருர்.

கோபாலய்யனே ஆயிரம், பதினுயிரம்தரம் சபித்தது.

அப்போது என் மனம் இருந்த நிலேயில் நான் அழுவதா? சிரிப்பதா? அல்லது அவளுடைய வாழ்க்கையின் குலேவை நினேத்து வருந்துவதா? எனக்கு ஒன்றுமே புரியவில்லே. நான் போட்ட திட்டங்களும், நான் கட்டிய கோட்டைகளும் வெறும் கனவுதானு? குமுறி எழும் வேதனே நிறைந்த மனத்துடன் ஆபிசிற்குச் சென்றேன்.

ஆபீசில் ஒரு வேலேயும் ஓடவில்லே. அப்படியே நாற்காலியில் சாய்ந்தபடியே அவர் வந்துஇன்றுஜாதகம் கேட்டால் என்ன பதில் சொல்வதென்று யோசித்துக்கொண்டே உட்கார்ந்திருந்தேன். எனக்கு அவரை நினேக்கும்போதெல்லாம் ஆத்திரம் பிறிட்டுக்கொண்டு வந்தது. விதியின் பயனேத் தடுக்க நான் யார்?" என்று என்னேயே சமாதானப்படுத்திக்கொண்டேன்.

"என்ன ராஜு" என்று கேட்டுக்கொண்டே கடைசியாக அவரும் வந்து சேர்ந்தார். அவரை "வாருங்கள்" என்று சொல்லக்கூட என் நாக்கு மறுத்தது. அவரையும் நான் அதிக நேரம் நிறுத்திவைக்க விரும்பவில்லே. இதற்குள் அவருக்கு என்ன பதில் சொல்வதென்று முடிவு செய்துவிட்டேன்.

சட்டென்று "உங்கள் பெண்ணுக்கு செவ்வாய் தோஷம் உண்டோ?" என்றேன்.

"என்ன? செவ்வாய் தோஷமா? நன்ருயிருக்கே. யார் சொன்னது உனக்கு? என் பெண் ஜாதகத்தில் தோஷமே கிடையாதே" என்று படபடவென்று பேச ஆரம்பித்தார் அவர்.

"அடாடா. என்னுடையது செவ்வாய் தோஷ ஜாதகம். கொடுத்தும் பிரயோஜனமில்லே எதற்கும் பிராப்தம் வேண்டாமா" என்று அவருடைய வேதாந்தத்தை அவருக்கே திருப்பி ஓதினேன்.

அவர் கட்டிய கோட்டைகள் தகர்ந்து விழுவதை அவர் எதிர் பார்த்திருக்க முடியாது. தான்.

அதன் பிறகு என்னென்னவோ சொன்னுர். ஏதேதோ பேசினுர். ஆனுல் அவருடைய வார்த்தைகள் ஒன்றுமே என் காதில் ஏறவில்லே. மிகவருத்தத்துடன் தன் இருப்பிடத்திற்கு சென்று விட்டார் கடைசியாக. "உலகில் நல்லது செய்வதும் இந்தப் பணம் தான். கெடுதல் செய்வதும் இந்தப் பணம் தான். இவ்வளவு அழகையும், இனிமையான குரலேயும் படைத்த கடவுள் அவளுக்கு கொஞ்சம் செல்வத்தையும் கொடுத்திருக்கக்கூடாதா? 'எல்லாம் விதிவசம்' என்று சொல்லி என் மனதை நானே தேற்றிக் கொண்டேன்.

ஆனுல் அவளுடைய மோஹன உருவமும் அன்று அவள் கண்டத்திலிருந்து கிளம்பிய இன்பநாதமும் என் மனத்தை விட்டு இன்னும் அகலவே இல்லே.

# குண்டலகேசி

(6-ம் பக்கத் தொடர்ச்சி)

துப் போனான். விசித்து விசித்து அழுகின்ற அவள் முகத்தையும், கசிந்து பெருகும் கண்ணீரையும், அவள் உள்ளம் நொந்து கூறிய உணர்ச்சி நிறைந்த வார்த்தைகளையும் கண்டு, கேட்ட நாய்கன் நெஞ்சம் நெக்குருகினான். அவன் மனத்தில், பத்திரையின் வார்த்தைகள் ஆழப் பதிந்தன. 'அந்தோ நான் என் செய்வேன்? இவளைக் காப்பது என் கடமை!- ஆனால் இவள் பொருட்டு அவனை விடுவிப்பதும் என் கடமையாக இருக்கிறதே! அந்தப் பெருந் துரோகியை எவ்வாறு மீட்பது? சோழவேந்தனது நெறி பிறழா நியாயத்தில், அவனுக்கு விடுதலை ஏற்படுவது எளிய செயலா? அந்தோ, யாருக்கு நான் வருந்துவேன்? கள்வனென்று பழி பூண்டு சிறைப்பட்டுச் சென்ற பின்பும் அவனிடம் சிறிதும் இவளுக்குக் காதல் குறையவில்லையே? என்ன விந்தை! அந்தக் கள்வனுக்குக் காதலியாக வாழவே இவளும் விரும்புகிறாளே! காதற் பெருந்திரைக்கு முன், பழி பாவம், அச்சம், பொய் மெய் என்பன மறைந்து புலப்படாது போகின்றனவே! கன்னிப் பருவத்து இயற்கைக் காதலால் வந்த பேரிடர் இது! என் உயிருள்ள வரையில் இவளுடைய விருப்பத்தையெல்லாம் நிறைவேற்றுவது என் கடமை! போதி ஸத்துவா! நான் என் செய்வேன்? உன்னிடம் பக்தி செலுத்தும் அவனை நீயே காப்பாற்ற வேண்டும்; உன்னிடம் பேரன்புடையவளான பத்திரையை நல்வாழ்வுறச் செய்வதும் உன் கடமை!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

## ஒரு வார்த்தை சொல்லுங்கள்

நாய்கன் வாய் திறவாமல் ஏதோ சிந்தனை செய்தவண்ணம் இருப்பதைக் கண்ட பத்திரை, "என் பொருட்டாவது அவரை விடுவிக்க வேண்டும்! அது தங்களுக்கு விருப்பமில்லையேல், என் உயிரைத் தங்கள் காலடியிலேயே விட்டுவிடுகிறேன். அவரை விடுவிக்கிறேன் என்று ஒரு வார்த்தை தங்கள் வாய் திறந்து கூற வேண்டும். அந்த ஒரு வார்த்தையே என் உள்ளத்தின் புண்ணை ஆற்றும்! துயரத்தை அடக்கும்! அவ்வார்த்தையே என்னைத் துக்கக் கடலிலிருந்து உயிர் பிழைக்கச் செய்யும் ஒரு தெப்பம்போல் உதவும்!" என்று மீண்டும் முறையிட்டாள்.

பத்திரையின் நிலையை நோக்க, நாய்கனால் இயலவில்லை. பத்திரையின் உட் கருத்தை—உண்மை நிலையை நன்கு உணர்ந்தான். இனி வாய் பேசாமலிருப்பது தகாது என்று எண்ணினான். அவளிடம் உள்ள பேரன்பால் 'பத்திரை! இன்னும் உன் புத்தி தெளிவு பெறவில்லையா? அவனை விடுவிப்பது எளிதில் முடிவதா? ஆயினும் நீ நினைப்பது எனக்கு வருத்தத்தையே அளிக்கிறது. அவனை விடுதலை பெற்றால், அவனுடன் வாழவே நீ எண்ணியிருக்கிறாயா? இது உறுதியா? அந்தக் கள்வனுடன்..." என்று சிறிது கோபத்துடன் கேட்டான். பத்திரை அஞ்சவில்லை.

"ஆம்! அவரைக் காதலித்த பின், வேறு ஒருவரை மனத்தாலும் நினைப்பேனா? அவரை மணப்பதாக நான் இருப்பதை யாவரும் அறிவார்கள்! பழி, பாவம் யாவும் அவருக்கு வருவன எனக்கும் வந்தன போலத்தான்! அவருடன் வாழக் கிடைக்கவில்லையேல் உண்ணாவிரதம் இருந்து உயிரை விடுவேன்!" என்றாள்.

"பத்திரை! உன் துணிவே துணிவு! பெண்கள் தாம் கொண்டதை எவ்வகையிலும் விடார்கள் என்பதற்கு நீயே உதாரணம்; நான் ஒன்று கேட்கிறேன்; கள்வனின் காதலி என்ற பழிச் சொல்லுடன் வாழ்க்கை நடத்துவதில் உனக்கு விருப்பம் இருக்கிறதா? அவ்விதம் செய்வது நம் வணிக குலத்திற்கே இழிவைத் தருவது அல்லவா? உன் குணம் ஏன் இப்படி மாறுபட்டு விட்டதோ? கள்வன் என்று உலக முழுதும் பழமொழி கூறுகின்ற அவனை மணந்து கொள்வதா?

## 'அவருடன்தான் வாழ்வேன்'

"தந்தையே! இன்னும் கேட்கிறீர்களே! வாழ்ந்தால் அவருடன் வாழ்வேன்; இல்லையேல் அவருக்கு முன்னதாகவே என் உயிரை விடுவேன். அவருக்காகவே வாழ்வேன். அவருக்காகவே இறப்பேன். அவர் கொலைஞரானாலும், கள்வரானாலும்—உலகமே அவருடன் என்னையும் சேர்த்துப் பழிமொழி கூறினாலும், அவருடன் வாழும் வாழ்க்கையையே நான் விரும்புகிறேன். அவருடன் வாழும் வாழ்வைக் காட்டிலும், இன்பம் தருவது வேறொன்றில்லை. இன்னும் யான் என் சொல்வேன்?"

"பத்திரை, நான் இனி என்ன சொல்லுவேன்! உன் எண்ணத்தை நீ மாற்றிக் கொள்ளவில்லை. ஊழ்வினை போல் யாவும் நடக்கும். உனக்குக் காதலனாக அவனை விதித்த விதி, இப்போது அவனை மீட்கவும் வேண்டும்! விதியின் செயலை யாரறிவார்? அரசன் ஆணையை யார் தாம் கடப்பார்? உன் நன்மையை விரும்பியே உயிர் வாழ்கின்ற யான், உன் விருப்பத்தை நிறைவேற்றாமல் இரேன்! சோழ மன்னனிடம் சென்று, கோடிக்கணக்கான பொன்களைக் கொடுத்தேனும் அவனை விடுவிக்க முயல்வேன். அதற்கு மேல், விதியின் செயல்!"

துக்கக் கடலில் மூழ்கித் தத்தளித்தவளுக்கு நாய்கனின் இவ்வார்த்தைகள் தெப்பம்போன்று உதவி சிறிது ஆறுதலை அளித்தன. அப்போது வீதியில் முரசொலி கேட்டது. நாய்கனும், பத்திரையும், வசந்தியும் திடுக்குற்று ஓடி, சாளரத்தின் வழியே வீதியை நோக்கினார்கள்.

வள்ளுவன் யானை மீதிருந்து முரசு கொட்டிச் சென்றான். இடையிடையே அரசனின் கட்டளை ஒன்றையும் கூறினான்; "காளன் என்ற பெயருடன், களவு கொலை செய்து வந்த ஸத்துக சிரேஷ்டியை நாளை தினம் விசாரணை செய்து கொலைத் தண்டனை விதிக்கப்படும்; இது அரசன் கட்டளை!"

வள்ளுவனின் வார்த்தைகளைக் கேட்டுக் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர் வீதியில் மாந்தர்; அப்போது, நாய்கன் முதலிய மூவரும் இடியொலித்தாற்போல் கலங்கினர்! 'ஆ' என்று அலறியவாறே நாய்கனின் பாதங்களில் பத்திரை விழுந்து புலம்பினாள்.

நாய்கனும் வசந்தியும் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்றி

னர். பத்திரை கண்ணீர்ப் பெருக்குடன், "இப்போதே, தாங்கள் புறப்படுங்கள்; இல்லையேல் இப்போதே என் உயிரைப் போக்கிக் கொள்கிறேன்;" என்று மன்றுடினாள்.

நாய்கனின் இருதயம் நெகிழ்ந்து வெம்பியது; "பத்திரை, பத்திரை, இதோ போகிறேன்; நீ வருந்தாமலிரு. ஸத்துகனின் தந்தை பெருஞ்சாத்துவனையும் அழைத்துச் செல்கிறேன்" என்று புறப்பட்டான். பத்திரை வசந்தியுடன் கன்னிமாடத்திற்குள் தளர்நடையுடன் போனாள்.

பன்னிரண்டு கோடி பொன்களுடனும், காரியப் பெயர் நால்வருடனும் பல்லக்கில் ஏறிப் புறப்பட்டான் நாய்கன். ஸத்துகன் மாளிகையை நோக்கிச்சென்றது பல்லக்கு. அவ்விடத்தை அடைந்ததும், நாய்கன், சிவிகையிலிருந்து இறங்கிக் காரியப் பெயருடன் உள்ளே சென்று பெருஞ்சாத்துவனைக் கண்டான். ஸத்துகனை நினைந்து புலம்பியவாறே சாய்ந்திருந்த பெருஞ் சாத்துவன், நாய்கனைக் கண்டதும் 'ஓ' என்று அலறினன்; நாய்கனுக்கு அவன் மீது பெரிதும் இரக்கம் உண்டாயிற்று. அருகில் பல வணிகர்கள் உடனிருந்து ஆறுதல் கூறினர். நாய்கனும் தேறுதல் சொன்னான்.

"நாய்கரே, என் கதி இவ்வாறு ஆயிற்றே! என் ஒரே புதல்வனையும் இழக்கிறேன்; என் உயிர் போகவில்லையே! நான் என் செய்வேன்! ஸத்துகனே காளன் என்ற கள்வன் என்பதை இதற்கு முன் சிறிதும் அறியேனே! அந்தோ! இனி இந்த மாளிகையோடு நான் மாண்டுபோக வேண்டியதுதான்! உமது பெண்ணை ஸத்துகன் மணந்து வாழும் மணக்கோலத்தைக் காணவேண்டுமென்று மகிழ்ந்திருந்தேனே! இனி, அவன் பிணக்கோலத்தையே காணப் போகிறேன்!..." என்று முறையிட்டுக் கொண்டேயிருக்கையில் இடைமறித்து ஆறுதல் கூறினன் நாய்கன். தான் வந்திருப்பதன் நோக்கத்தையும் உணர்த்தினன். இறந்த உயிர் திரும்பி வந்தது போலாயிற்று பெருஞ் சாத்துவனுக்கு; எழுந்து உட்கார்ந்து ஸத்துகனை எவ்வாறேனும் விடுதலைசெய்ய முயல்வோம் என்று எண்ணியவனாய், "நாய்கரே! உமது கருத்துப்படியே செய்தால், ஸத்துகனை நிச்சயம் விடுதலை செய்யலாம்; நானும் புறப்பட்டுவிட்டேன்; அவனை விடுதலை செய்வதற்காக என் உடைமை முழுதையும் கொடுக்க ஆயத்தமுடனிருக்கிறேன்; பதினெட்டுக் கோடிப் பொன் நானும் கொணர்கிறேன்" என்றான். சிறிதுநேரத்திற்கெல்லாம், பதினெட்டுக் கோடிப்பொன்களுடன் பெருஞ்சாத்துவனும் புறப்பட்டான். நாய்கனும், சாத்துவனும், பொன்குவியலுடன், பல்லக்கில் ஏறி அரசன் அரண்மனைக்குச் சென்றனர்.

## மன்னன் சபையில்

அரசன் சபையில் அமர்ந்திருந்தான். நாயகனும் பெருஞ் சாத்துவனும் அதை அறிந்து, தங்கள் வரவைக் காவலாளர் வழியாக அரசனிடம் உணர்த்தினர். அரசன் அவர்களை வரும்படி அழைத்தான். நாய்கனும் பெருஞ் சாத்துவனும், நிலைதளர நடந்து பொற்குவியல்களை அரசன் பாதத்தில் வைத்து வணங்கினர். அவர்கள் வந்திருப்பதன் நோக்கத்தை எளிதில் உணர்ந்தான் மன்னன். எனினும் முறையே, அவர்களை, "வந்த காரியம் என்ன?" என்று கேட்டான். கண்ணீர் சொரிய இருவரும் வாய்விட்டு அரற்றி ஸத்துகனை விடுதலை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டனர். பொற்குவியல்களையும், அவர்களையும் மாறி மாறி நோக்கியவாறே வாய்ப்பேசாமலிருந்தான் அரசன்.

"மன்னர் மன்னவ! ஸத்துகன் செய்த குற்றங்களை இம்முறை மட்டும் பொறுத்தருளவேண்டும். எங்கள் உடைமை முழுதையும் வேண்டுமானாலும் அளிக்கிறோம். கருணைசெய்து அவனை மன்னித்து விடவேண்டும். தங்களுடைய அன்புக்குப் பாத்திரமானவன் அவன்! இம்முறை பொறுத்து விட்டால் போதும். அவனை விடுதலைசெய்வது எங்கள் உயிர்களைக்காப்பது போலாகும்! வேந்த!" என்று மீண்டும் மன்றுடினர். அரசன் கடுங்கோபத்துடன் வாய் பேசாமல் இருந்தான். அவ்வளவில் சபையிலுள்ள, மந்திரியர், பிரதானியர் முதலோர் 'ஸத்துகனை விடுதலை செய்தல் தகாது!' என்று கூக்குரலிட்டனர். அவர்கள் யாவரையும் கையமர்த்தி விட்டு அரசன் கூறலானன். "நாய்கரே, பெருஞ் சாத்துவரே! சோழன் நெறி தவருன் என்பதை மறந்தீர்களா? உங்கள் இருவருக்காக, என் வளையாச் செங்கோல் வளையுமா? என் முன்னோன் மனுநீதி கண்ட சோழன், தன் மகன் செய்த குற்றத்திற்காக அவனைத் தேர்க்காலின் கீழ்ப்போட்டுக் கொன்றான் என்பதை நீங்கள் அறியீர்களா? நியாயம் என்பது யாவருக்கும் ஒன்றே. ஆதலால் என் கோபத்திற்கு ஆளாகாமல் நீங்கள் திரும்பி விடலாம், பொற் குவியலைக் கண்டு மயங்கும் அரசன் நானல்ல. பால் புளித்துப் பகல் மாறு படினும் என் நீதி மாறுபடாது, நாளை விசாரணை செய்து, நியாயம் போல் கொலைத் தண்டனையே விதிக்கப்பெறும். புத்த தேவனே ஸத்துகனுக்கு இந்தத் தண்டனையை அளிக்கிறான்." என்றான். அரசனுடன் எவ்வளவு மன்றுடியும் அவன் கேட்கவில்லை. அரசனுக்கும் கோபம் மிகுதியாகவே, இருவரும், மனம் உடைந்து திரும்பி விட்டனர்.

நாய்கன் மதி கலங்கிப் போனன்; 'ஸத்துகன் நிச்சயம் கொலை செய்யப்படுவான்' என்ற உறுதியால் அவன் மனம் கருகி விட்டது; நேரே தன் மாளிகை நோக்கிப் பல்லக்கில் சென்றான். பெருஞ் சாத்துவனுக்கு அரசன் முன்னிலையிலேயே பாதி உயிர் போய் விட்டது; தன் மாளிகையை அடைந்து கட்டிலில் சாய்ந்ததும், "ஸத்துகா,...ஸத்துகா..." என்று பிதற்றினன்; கண்கள் இருண்டன. செவிகள் அடைத்துப் போயின. மூச்சுத்திணறியது. ஸத்துகனை ஸ்மரித்தவாறே, அவன் உயிர் உடலிலிருந்து அகன்றது. புதல்வனுக்காகவே உயிருடன் வாழ்ந்த அவன், அவனை இழந்து உயிருடன் இருப்பானா? புத்திர சோகத்தால் அவனுயிர் அகன்றதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது? விரும்பினும் விரும்பாவிடினும் வருவது வந்தே தீருமன்றோ? ஆகவே, நாய்கனும், சாத்துவனும் அரசனிடம் போய் வந்ததை வீண் முயற்சி என்று தானே கூறவேண்டும்?

(தொடரும்)



# சூரியனை நோக்கி . . .

தினசரி அருணோதயத்தில் ஏராளமான விமானங்கள் இந்திய விமான நிலயங்களிலிருந்து கிளம்பி கிழக்கு நோக்கிச் செல்கின்றன. ஏன் தெரியுமா? ஜப்பானியரின் "உதய சூரிய"க் கொடி இந்தியாவில் நாட்டப்படாமலிருப்பதற்காகத்தான். நமது தினசரி உபயோகத்திற்காக நாம் வாங்கும் பல்வேறு சாமான்களும்கூட விமான உற்பத்திக்கும், விமானிகளின் பயிற்சிக்கும் ஏராளமாகத் தேவைப்படுகின்றன. ஆகவே இச் சாமான்களை நாம் குறைத்து வாங்க வாங்க நமது பாதுகாப்பாளர்களான நமது படைகளுக்கு அவை அதிகமாகக் கிடைக்கும். இதே மாதிரி நமது செலவுகளைக் குறைக்கக் குறைக்க தேசத்திற்குக் கடன் கொடுத்துதவுவதற்கு அதிகப்பணம் மீதப்படும்.

நாம் வேலை செய்கையிலும்சரி, உறங்குகையிலும்சரி, நமது வீரவிமானிகள் அல்லும் பகலும் ஆகாசத்திலிருந்து காவல் புரிந்துகொண்டிருக்கின்றனர். அதுபோல் நாமும் நமது பங்குக்கு ஓரளவுயுத்தசேவைபுரியவேண்டாமா? அதற்கு நமது ஆடம்பரச் செலவுகளைக் குறைத்து, அதனால் மீதப்படும் பணத்தை தேசத்திற்கு கடன் கொடுத்து உதவுவோமாக.

**டிபென்ஸ் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்**

...அல்லது டிபென்ஸ் லோன்களைத்தவிர

வேறெதையும் வாங்குமுன் — சற்றே யோசியுங்கள்



ஸர்ட்டிபிகேட்டுகள் உங்கள் தபாலாபீஸில் கிடைக்கும் ரூ. 10-க்கு பத்துவருடத்தில் 3-9-0 லாபம் கிடைக்கிறது.

CPU-26-TM

நவ நாகரீகம்

★

# ஒரு நகை

★

(காசினி எழுதியது)

* * * 'நேற்று என் சிநேகிதி சுந்தரியைக் கிளப்பிற்கு அழைத்துக்கொண்டு வந்திருந்தேன்; நீங்கள் ஏன் வரவில்லை?' என்று நளினிதேவி என்னைக் கேட்டாள்.

'முதலாவதாக உன் சிநேகிதி ஒருத்தியை நீ அழைத்துக் கொண்டு வரப்போகிற சமாசாரம் எனக்குத் தெரியாது; இரண்டாவதாக என் சிநேகிதி ஒருத்தி வந்திருந்தாள். அவளுடன் பேசிக்கொண்டிருந்து விட்டேன்!' என்றேன்.

'ஏன்! எதற்காக உன் சிநேகிதி! என்று மாலினி கூறிக் கொண்டிருக்கும் போதே:—'என் சிநேகிதி ஒரு மாலை போட்டுக்கொண்டிருந்தாள். பார்க்க ரொம்பவும் அழகாக இருந்தது. அதை உங்களுக்குக் காட்டலாமே என்று தான் அவளையே கிளப்புக்கு அழைத்து வந்தேன்; இரவு ரயிலிலேயே ஊருக்குப் புறப்பட்டு விட்டாள்!' என்றாள் நளினிதேவி.

'என்ன நகை? எங்களுக்குக் காட்டக்கூடாதோ?' என்று பங்கஜம் அவளுடன் கேட்டாள். 'உருண்டை மணிகளை நீள வாட்டத்தில் செய்திருந்தது. மணிகள் என்றால் தங்கத்தில் மொழுக்கென்று செய்திருக்கும் மணிகள் அல்ல: பூவேலை, அதாவது 'பிலிகிரி' வேலை என்கிறார்களே அந்த மாதிரியில் துவாரங்கள், உடைய மணிகள். இந்த மாதிரி வேலைப்பாட்டைச் சாதாரணமாக வெள்ளியில் தான் செய்கிறார்கள். இப்போது நாம் இந்த தினுசில் லோலாக்குகள், நெக்லெட்டுகள், கைக்கு வளையல்கள் எல்லாம் சர்வ சாதாரணமாக வெள்ளியில் வாங்கித் தங்கம் தோய்த்துப் போட்டுக்கொள்ளுவதில்லையா? இதே தினுசில் தங்கத்தில் செய்திருந்தது என்றாள் நளினிதேவி.

'அதில் என்ன விசேஷம்? வெள்ளியில் செய்து தங்க முலாம் பூசின நகையும் தங்கம் மாதிரி தானே இருக்கும்?' என்றாள் ஒரு சிநேகிதி.

'பிலிகிரி' வேலையைச் சாதாரணமாகத் தங்கத்தில் செய்வது கிடையாது. வேலைப்பாடு நுட்பமானது. இதற்கு அதி சுலுபத்திலே வளையாத சற்றுக் கடினமான உலோகம்தான் சௌகரியமாக இருக்கும். இதனால் இந்தப் பூவேலையை வெள்ளியில்தான் செய்கிறார்கள். தங்கத்திலா செய்திருந்தது? அப்போது ரொம்பவும் அழகாக இருந்திருக்குமே?' என்றாள் லேடி சுந்திராசாரி.

—32-ம் பக்கம்



கோயமுத்தூர் பிரபல டாக்டர் ஆர். சுந்தரராஜனின் குமாரர் ஸ்ரீ எஸ். ராஜகோபாலனுக்கும், திருப்பூர் இம்பீரியல் பாங்கியைச்சேர்ந்த ஸ்ரீ வி. பி. பார்த்தசாரதி அய்யங்கார் குமாரத்தி சௌ. ருக்மிணிக்கும் சமீபத்தில் திருப்பூரில் சிறப்பாக விவாஹம் நடைபெற்றது.



சென்றவாரம் ஜெமினி ஸ்டுடியோவில் தென்னிந்திய பிலிம் வர்த்தக சபைத் தலைவர் ஸ்ரீமான் எஸ். எஸ். வாஸன் ஒரு தேக்கச்சேரி நடத்தினர். ஸ்ரீ வாஸன் பேசுவதையும், 'ஹிந்து' ஆசிரியர் ஸ்ரீ கே. ஸ்ரீநிவாஸன, 'மித்திரன்' ஆசிரியர் ஸ்ரீ வி. ஆர். ஸ்ரீநிவாஸன், ஸ்ரீமான்கள் ராமநாத கொயங்கா, டி. எஸ். சொக்கலிங்கம் முதலியோரையும் படத்தில் காணலாம்.

# கண்டதும் கேட்டதும்



## சாத்தூர் ஸ்ரீ சுப்பிரமண்யம்

கொஞ்சங்கூட சிரமமின்றி படிப்படியாக ராக சஞ்சாரம் செய்து உருப்படிகளைப் பாடுகிறார் ஸ்ரீமான் சாத்தூர் சுப்பிரமண்யம். பிர்க்காக்கள் அமோகமாக விழுகின்றன. சென்ற வாரம் அவர் திருச்சி ரேடியோவில் பாடினார். ஆரம்பத்தில் கல்யாணி ராகத்தை வெகு முடுக்காகப் பாடினார். 'சிவேபாஹிமாம்' என்ற தியாகராஜஸ்வாமி கீர்த்தனையில் சரணத்திலே இரண்டு இடங்களில் ஸ்வரம் பாடியது விசேஷமாயிருந்தது. இக்கீர்த்தனையை அவர் சற்று நிதானமாகவும், படபடப்பின்றியும் பாடியிருந்தால் சிறப்பாகவிருந்திருக்கும். அடாணா ராகத்தில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி இயற்றியுள்ள 'ஏல நீ தயாராது?'' என்ற கீர்த்தனையைப்போல அமைக்கப்பட்டுள்ள ''இன்னும் இரக்கம் வல்லையா ஏழை என் மீது என்ன வர்மம் சொல் ஐயா'' என்ற நீலகண்ட சிவன் பாட்டைப் பாடினார். அவர் இதை இனிமை பொருந்திய பாணியில் கையாண்டார். பிறகு தோடி, காம்போஜி, மாஞ்சி, முதலிய ராகங்களில் க்ருதிகள் பாடினார். 3 உருப்படிகளைப் பாடி முடிப்பதற்குள் முக்கால் மணி ஆகிவிட்டது. பின் பகுதியில் பாடிய ராகங்கள், கீர்த்தனைகள் இவற்றுடன் ஒத்திட்டுப் பார்க்கையில் முன் பகுதியில் பாடியவை சற்று சுலபமானவை; சிரமமின்றிப் பாடக்கூடியவை. ச்யாமா சாஸ்திரி க்ருதியான ப்ரோவ வம்மா ('மித்திரன்' வாரப்பதிப்பில் பிரசுரமாயிருக்கிறது) வை

## "நீலம்"

அவர் திறம்படப் பாடினார். அக் கிருதி மூன்றாவதாகவோ, நான்காவதாகவோ உள்ள உருப்படியாகப் பாடியிருந்தால் இன்னும் விறு விறுப்பாகவும், உருக்கமாகவும் பாடியிருக்க முடியும். காம்போஜியிலும், பேஹாக்கிலும் புது சங்கதிகளைப் புகுத்தி மெருகு கொடுத்துப் பாடியதைக் குறிப்பிடவேண்டும். இன்னொரு விஷயம். ஸ்ரீமான் சுப்பிரமண்யத்தின் சாரீரத்தில் இனிமை இருக்கிறது. அபாரமான பிர்க்காக்கள் விழுகின்றன. இது இரண்டும் இன்னும் பரிமளிக்க வேண்டுமாயின் எந்த இடத்திலும் சற்று நிதானமாக நிலைத்து நின்று பாடவேண்டும்.

* * * *

## ஸ்ரீமதி வஸுந்தரா தேவி

ஸ்ரீமதி வஸுந்தரா தேவியின் ரேடியோக்கச்சேரி சென்னையில் நடந்தது. ஸ்ரீமதி வஸுந்தரா ஹிந்துஸ்தானி சங்கீதம் தான் அதிகம் பாடுவார். அன்று தோடியில் 'ஏரா நாபை' வர்ணம் பாடிய போதே அவரது சாரீரம் சுகமாக வில்லை என்பது தெளிவாயிற்று. கச்சேரி முதலெடுப்பில் சிலருக்கு அம்மாதிரியிருப்பதுண்டு. பிறகு பாடப் பாட சரியாகி விடுவதும் அனுபவம். ஸ்ரீமதி வஸுந்தராவின் சாரீர நிலை முயற்சிக்கேற்ற பலனைத் தரவில்லை. ராகமாலிகை பாடும் வரையில் அவரது சாரீரம் அநேகம் சந்தர்ப்பங்களில் சிக்கிகொண்டே வந்தது. ஸிந்து பைரவியை அவர் வெகு அழகாகப் பாடினார். மேல் ஸ்தாயியை எட்டாமல் அவர் பாடிய இடங்கள் தான் சரியாக விருந்தது. சாரீரம் சரிவரப் பேசாததே இந்நிலைக்குக் காரணம்.

* * * *

## குபேர குசேலா

ஜுபிடர் படக்கம்பெனியார் தயாரித்த மேற்படி படம் சென்னையில் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. எப்படி இருக்கிறது? எவ்வளவு நாள் போகும்? கீழ்க் கண்ட விஷயங்களைக் கவனித்தால் ஷை கேள்விகளுக்குப் பதில் தானே வரும். நீளத்தில் குறைவில்லை; படப்பிடிப்பு மிகவும் திருப்திகரமாயிருக்கிறது; என். எஸ். கிருஷ்ணன் கோஷ்டிதான் இதிலும்; நடிகர் நடிகைகளுக்கு வேஷப் பொருத்தமும், இருக்கிறது. பாட்டுகள் எல்லாம் கர்னாடக ராகங்களில் போட்டிருக்கிறார்கள். பக்தகுசேலராகச் சிவனும், குபேர குசேலராக சின்னப்பாவும் வேஷந் தாங்கியிருக்கிறார்கள். கிருஷ்ண பரமாத்மா (பி. எஸ். கோவிந்தன்) மாலையிலிருந்து மல்லிகா என்ற பெண்ணைப் படைத்து பாதாள கேதுவின் குமாரியாகச் செய்கிறார். டி. ஆர். ராஜகுமாரி மல்லிகாவாகத் தோன்றுகிறார். கிருஷ்ணனின் அருளால் குசேலருக்கு சர்வ சம்பத்தும் கிட்டி பூலோக குபேரனாக விளங்குகிறார். இதில் பெருமை கொண்டு குபேரன் குண்டலகேசரியை (நாராயணராவ்) ஏவி குசேலரைக் காயகல்ப சிகிச்சைசெய்து பாதாள லோகத்துக்கு வரும்படி செய்து மூவ்வுலகையும் ஆளவேண்டுமென்ற ஆசை யூட்டச்செய்கிறான். இங்கு மல்லிகாவுக்கும், குபேர குசேலருக்கும் காதல் ஏற்படுகிறது. இதிலிருந்து இன்னல்கள் பல தோன்றி இறுதியில் கிருஷ்ண

—அடுத்த பக்கம்

## நவநாகரீகம்

(30-ம் பக்கத் தொடர்ச்சி)

'ரொம்பவும் அழகாகத்தான் இருந்தது! உங்களுக்கு எல்லாம் காட்டலாமெனத்தான் பார்த்தேன்! நேற்று யாரும் வராமல் இருந்துவிட்டீர்களே!' என்றாள் நளினாதேவி.

'வாஸ்தவமாகவே இந்தப் பிலிகிரி வேலை தங்கத்தில் ரொம்பவும் அழகாகத் தான் இருந்திருக்கும். இது சிந்து பக்கம் செய்கிறார்கள் இல்லையா? இவ்விதத் தங்கத்தோடா ஒன்று நான் பார்த்திருக்கிறேன்!' என்றேன்.

'இதைத் தங்கத்தில் செய்வதில் அப்படி என்ன விசேஷம்? என்றாள் கமலி.

'வெள்ளியில் முலாம் தோய்த்த நகை பார்வைக்குத் தங்கம் போல் தோன்றினாலும், அதில் ஒருவித மிருதுத் தன்மை இருக்காது. அசல் தங்க பிலிகிரி வேலை இந்த மிருதுத் தோற்றத்துடன் பார்க்க ரொம்பவும் நாசூக்காகவும், களையாகவும் இருக்கும்!' என்று சொன்னேன்.

'கூலி?' என்றாள் மாலினி.

அதிகமாகத்தான் இருக்கும். நகை அழகாக வேணுமானால் கூலியைப் பார்த்தால் முடியுமா? ஆனால் இந்த நகை இப்போதைக்கு நமக்குக் கிடைக்கப் போவதில்லை; எதற்கு வீண் யோசனை?' என்றாள் லேடி சுந்திராசாரி. ஆனால் மற்றவர்கள் இதை இத்துடன் விட்டுவிடவில்லை. கராச்சி முதலிய இடங்களில் உத்தியோகார்த்தம் சென்றிருக்கும் தங்கள் பந்துக்களுக்கு எழுதி, இது விஷயமாக ஆராய்ச்சி செய்வதில் ஈடுபடப் போவதாகக் கூறிச் சென்றார்கள்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

பரமாத்மாவால் அனைத்தும் சரிப்பட்டு விடுகிறது. ஒவ்வொருவரும் தங்கள் பாகத்தை திருப்திகரமாக நடித்திருக்கின்றனர். அச்வனியாகத் தோன்றும் கிருஷ்ணனும், மாலதியாக (ருக்மணியின் தோழி) நடிக்கும் மதுரமும் வழக்கப்படி தங்கள் ஹாஸ்யத்தைக் காட்டியிருக்கின்றனர். மல்லிகா நாடகம் நடத்தும் காட்சியையும், சுயம் வரப்படலத்தையும் சற்று குறைத்திருக்கலாம். தேவியைத் துதித்துக் குபேர குசேலர் தவம் கிடக்கும் காட்சியில் 'பரா சக்தி! பராசக்தி.' என்று வாய் ஓயாமல் ஜபம் செய்வதையும் மட்டுப்படுத்தியிருக்கலாம்.

---

## காரட் பாயசம்

காரட் கிழங்குகளைத் தோலைச் சீவி, கொப்பரைத் துருவில் துருவிக்கொள்ள வேண்டும். அல்லது, கத்தியினால் அரிந்து கொள்ள வேண்டும். இதை பாலில் வேகவைத்து, மட்டுச் சர்க்கரை, சாரப்பருப்பு, குங்குமப் பூ, எல்லாம் போட்டுப் பாயசமாகப் பண்ணலாம். மிகவும் ருசியாக இருக்கும். பாலை நன்றாகக் குறுக வைத்துப் பாயசத்தை கெட்டியாகப் பண்ணலாம். அல்லது சர்க்கரை கொஞ்சம் கூடப் போட்டு, நீர்க்கவும் பண்ணலாம். இத்துடன் கோதுமைப் பாலை விட்டும் பண்ணலாம். இது ஒரு புதிய 'பாஷன்' என்று வைத்துக்கொள்ளேன். எதற்கும் ஒரு பாதாங்கீர் முன்னின்றது. பாதாம் விலை வீசை ஐந்து ரூபாய் எனவே, வேறு தினுசுகள் தானாகவே கிளம்ப வேண்டியதுதானே.

விலை என்றதும் ஞாபகம் வருகிறது. முந்தி எல்லாம் நாம் ஒரு படி அரிசிக்கு ஆழாக்கு ஜவ்வரிசி என்று போட்டு பிழிந்த வடாம் இடுவோமா? இப்போ ஜவ்வரிசியின் விலை ஏறிவிடவே, இதற்கு பதில் கொஞ்சம் பிரண்டைச் சாற்றை விட்டு இந்த வடாத்தைச் செய்கிறார்கள். கரகரப்பாகவும் ருசியாகவும் நல்ல வெளுப்பாகவும் இருக்கிறது.

---

## போர்போகும் போக்கு

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பஜார் என்ற 24000 பிரஜைகளைக் கொண்ட நகரம் பூகம்பத்தினால் அழிந்ததாக இஸ்தம்பூலிலிருந்து தகவல் கிடைத்திருக்கிறது. 2 பூகம்ப அதிர்ச்சிகள் ஏற்பட்டன. இஸ்தன்பூலிலும் இந்த அதிர்ச்சி தென்பட்டது.

36000-பேரைக் கொண்ட ஜீய்வெக் நகரில் பெருஞ்சேதமேற்பட்டது.

அடாபஸாரில் 15,000 பேர் பூகம்பத்தினால் இறந்துபோனதாக ஜெர்மன் ரேடியோ பிறகு தெரிவித்தது. அது மேலும் கூறியதாவது:—சேதத்தின் அளவை மதிப்பிடமுடியாது. அடாபஜாரில் 100-க்கு 40 வீதமுள்ள வீடுகள் பூரணமாக அழிந்துவிட்டன. மற்றும் 100-க்கு 30 வீதமுள்ள வீடுகள் படு சேதமடைந்தன.

இஸ்தன்பூல் வாசிகள் பீதியுற்று வீடுகளையும் ஹோட்டல்களையும் விட்டு வெளியே ஓடி வந்தார்கள். அனடோலியாவின் இதர பாகங்களிலும் பூகம்ப அதிர்ச்சி ஏற்பட்டது.

* * * * *

### ருமேனியப் படகில் வெடி விபத்து

சென்ற வாரம் 'கரோல்லை' என்ற மாஜி ருமேனிய அரசரது படகு டான்யூப் நதியில் சுலினாவுக்கும் கலாட்ஸுக்குமிடையில் போய்க்கொண்டிருக்கையில் திடீரென வெடி விபத்துக்குள்ளாகியது இதனால் 600 பேர் (பல ஜெர்மன் ருமேனிய ஆபீஸர்கள் உள்பட). மாண்டனர் என்று அங்காரா விலிருந்து வந்த செய்தி கூறுகிறது.

## பாண்டிலேரியா துறைமுகம்



இத்தாலியிலுள்ள பாண்டிலேரியா துறைமுகத்தின் படமிது. விமானத்திலருந்து இப்படம் எடுக்கப்பட்டிருக்கிறது. விமானத்திலிருந்தும், கடலிலிருந்தும இந்த இடம் இடைவிடாமல் தாக்கப்பட்டது.





## நியூயார்க்கில் இந்திய மாலுமிகள் சங்கம்



நியூயார்க்கில் இந்திய மாலுமிகளுக்கென்று ஒரு சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. அங்கு ஓர் இடத்தில் இந்திய மாலுமிகளும சங்க சிப்பந்திகளும் சமபாஷிக்கின்றனா. வலது புறமருப்பவர்தான் சங்க மானேஜர் ஸ்ரீமான் ஏ. சௌத்ரி. ஸ்ரீ ஸிக்கந்தர்மே என்பவர்தான் சமயற்காரர். அவரை இடதுபுறத்தில் காணலாம.

இந்தியாவின் ஏஜண்டு ஜெனரலான ஸர். கிரிஜா சங்கர் பாஜ்பாய் ஷை சங்கத்தில் சில இந்திய மாலுமிகளுடன் சம்பாஷிக்கிறுர்.



## அட்டைப் படம்



மும்தாஸ் சாந்தி "கிஸ்மத்" என்ற ஹிந்திப் படத்தில் தோன்றுகிறுர்.

# ஸ்ரீமத் பகவத்கீதை



சென்னை ஸம்ஸ்கிருத காலேஜ்
உபாத்தியாயராய் இருந்த கீர்த்தனாசார்ய
ஸி. ஆர். ஸ்ரீனிவாஸய்யங்கார், பி. ஏ.
எழுதியது.



மூலத்துடனும், அத்வைத விசிஷ்டாத்வைத பாஷ்யச் சுருக்கத்துடனும், இதுவரையில் வெளியிடாத பல ரகஸ்யங்கள் அடங்கிய முன்னுரையுடனும், கண்ணனுடைய கருத்திற்கிணங்க எழுதப்பட்டது.

முழு காலிகோ பயிண்டு செய்தது.

**விலை ரூபா 3.**

(தபாற் செலவு 0—8—0)



இன்னும் இதர புத்தகங்களும் கிடைக்கும்.

புத்தக ஜாபிதாவுக்கு எழுதவும்.

எமது எல்லா புத்தகசாலைகளிலும் கிடைக்கும். நேரில் விஜயஞ்செய்து தேவைக்கு ஆர்டர் செய்யவும். எல்லா 'மித்திரன்' ஏஜெண்டுகள் மூலமும் பெற்றுக் கொள்ளலாம்.

மானேஜர்,
சுதேசமித்திரன் புத்தகசாலை,
மவுண்ட் ரோடு : : மதராஸ்.

Printed and Published by T. S. Visvanatha Iyer, B. A., at the "Swadesamitran" Power Press, Mount Road, Madras.—*Editor:* C. R. Srinivasan, B. A.